4 பக்கங்கள் 13 காசுகள்

பதிவு எண்: எம். 8798.

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 10] மதுரை 23-9-72 சனி [மலர் 224

## சி. கே. மாதவன் மற்றும் ஐவர் ஜாமீனில் விடுதலை

சென்னை. செப். 22—

பிரதாப சந்திரன் கொலை வழக்கில் சேர்க்கப் பட்டிருந்த சி. கே. மாதவனும், மற்றும் நாடோடி ஜெயராமன், பாபு, சைலம், அருள்தாஸ், தேவராஜன் ஆகிய ஐவரும் நேற்று ஜாமீனில் விடுதலை செய்யப் பட்டனர்.

வேலூரிலேயே இருக்கவேண்டும் என்ற நிபந்தனை யுடன் ஜாமீனில் விடுதலையாகி இருந்த ஆர். குசேலருக்கு, நாள்தோறும் போலீசில் ஆஜராக வேண்டும் என்றிருந்த நிபந்தனை தளர்த்தப்பட்டது.

## அமெரிக்கா உளவு வேலை காங். தலைவர் குற்றச்சாட்டு

கல்கத்தா செப் 21—

இந்தியாவுக்கும் — பங்களா தேசத்துக்கும் இடையே உள்ள உறவைக் கெடுக்க, அமெரிக்காவின் மத்திய உளவு ஸ்தாபனம் முயற்சி செய்து வருவதாக இந்திரா காங்கிரஸ் தலைவர் சங்கர்தயாள் சர்மா இன்று குற்றம் சாட்டினர்.

தற்போது டெல்லியும், மேற்கு வங்கமும் அமெரிக்க உளவு ஸ்தாபனத்தின் நடவடிக்கைகளுக்கான முக்கிய கேந்திரங்களாக உள்ளன என்றும் சர்மா கூறினர்.

# விலைவாசி உயர்வு, வேலையில்லா திண்டாட்ட எதிர்ப்புப் போராட்டம்

## மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தமிழ்மாநிலக் குழு அறைகூவல்

**மதுரை, செப். 21—**

**இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)யின் தமிழ் மாநிலக் குழுக் கூட்டம் 1972 செப்டம்பர் 19, 20 தேதிகளில் மதுரையில் நடைபெற்றது. கட்சியின் அரசியல் தலைமைக் குழு உறுப்பினர் தோழர் பி.ராமமூர்த்தியும் கூட்டத்தில் கலந்துகொண்டார். கீழ்க் கண்ட தீர்மானங்கள் அக்கூட்டத்தில் நிறைவேற்றப்பட்டன.**

### மத்திய - மாநில அரசுகளின் கொள்கைகள்

1) சமீப மாதங்களில் மக்கள் உபயோகிக்கும் அத்தியாவசிய பண்டங்களின் விலைவாசிகள் என்றுமில்லாத அளவு ஏறிவிட்டன. இதனுல் மக்களின் வறுமை வளர்வது கண்டு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநிலக் குழு ஆழ்ந்த கவலையைத் தெரிவித்துக் கொள்கிறது.

காங்கிரஸ் கட்சி ஆட்சி பீடத்திற்கு வந்தது முதற் கொண்டே விலைவாசிகள் ஏறிக்கொண்டே வந்திருக்கின்றன. சமீப காலத்திய அசாதாரண விலையேற்றத்திற்கு பங்களாதேச யுத்தம் தான் காரணம் என்று பிரதமர் இந்திரா காந்தியின் வாதத்தை மாநிலக் குழு மறுக்கிறது. யுத்தத்தின் பெயராலும், அகதிகளின் பெயராலும், மக்களின் மீது புதிய வரிகளைச் சுமத்தி, பெற்றிருக்கும் வருமானம் இதற்கான செலவுகளைக் காட்டிலும் அதிகமானவை.

### காரணம் என்ன?

இந்த நிலைக்கு, இந்திய அரசு பின்பற்றி வரும் வரிக் கொள்கையும், நிதிக்கொள்கையும், மற்றும் உள்ள பொருளாதாரக் கொள்கையும் தான் பிரதான காரணங்களாகும்.

திட்டங்களின் பெயரால், பெருமுதலாளிகளுக்கு சலுகைகளை வழங்கி, பொருள்கள் மீதுள்ள வரிகளை ஆண்டுதோறும் உயர்த்தி, விலையேற்றத்திற்கு வழிவகைகள் செய்து கொடுத்தது மத்திய அரசு.

மேலும், நாட்டில் உற்பத்தியான பொருள்களின் வினியோகத்திற்கு தேவையான அளவிற்கு மேல் அதிகமாக கரன்சி நோட்டுகளை அச்சடித்ததின் மூலம் பணவீக்கத்தை ஏற்படுத்தியது. இதனுலும் விலைவாசிகள் ஏறி வருகின்றன.

### திட்டத்தின் நோக்கம்

இவைகளெல்லாம் பாமர மக்களின் உழைப்பை பெரும் முதலாளிகள் கொள்ளையடித்து மூலதனமாக மாற்றுவதற்கான சாதனங்கள். நாடாளுமன்றத்தில் 31-7-72 அன்று "விலைவாசி ஏற்றத்துக்கு ஒத்தவாறு சம்பள உயர்வு கொடுத்தால் அது திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சி பூராவையும் பாதிக்கும்." என்று ஒய். பி. சவாண் கூறியது குறிப்பிடத்தக்கது.

அரசின் திட்டங்களே விலைவாசி ஏற்றத்தை அடிப்படையாகக் கொண்டுள்ளது என்பது இதிலிருந்து தெளிவு.

இக்கொள்கைகளினுல் ஏகபோக பெருமுதலாளிகள் கொழுத்தனர். அரசிற்கு கொடுக்க வேண்டிய வரியை கொடுக்காது ஏமாற்றி கள்ளப் பணத்தை ஏராளமாக உற்பத்தி செய்தனர். அதுவும் சேர்ந்து விலைவாசி உயர்வை ஏற்படுத்தியுள்ளது. சர்க்காரால் நியமிக்கப்பட்ட வாஞ்சு கமிட்டி. 1968—69ம் ஆண்டில் மட்டும், அரசிற்கு செலுத்தாமல் ஏமாற்றப்பட்ட தொகை ரூ. 1400 கோடியென்று கூறியுள்ளது குறிப்பிடத்தக்கது.

### தொழில் வளர்ச்சி பாதிப்பு

மக்களின் வாங்கும் சக்தி நாளுக்குநாள் குறைந்து வருவதால் தொழில்கள் பாதிக்கப்படுகின்றன. எல்லா மாநிலங்களிலும் கைத்தறித் துணி வாங்குவார் அற்று ஏராளமாகத் தேங்கிக் கிடக்கின்றன. தொழில் வளர்ச்சி பாதிக்கப்படுகிறது. சமீப பல ஆண்டுகளில் புதிய தொழில் முதலீடுகளில் பாதிக்குமேல் ஆடம்பர பண்டங்களை உற்பத்தி செய்யும் தொழில்களில் ஈடுபடுத்தப்பட்டுள்ளதே இதற்குச் சான்று. இதனுல் வேலையில்லாத் திண்டாட்டம் வளர்கிறது. இந்நிலையில், இக்கொள்கைகள் மாற்றப்பட்டு, உடனடியாக கீழ்க்கண்ட நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட வேண்டுமென்று மாநிலக் குழு கோருகிறது.

### நோட்டு அடிப்பதை நிறுத்துக

(அ) உணவு தானியங்கள், சீனி, பருப்பு, எண்ணெய், துணி, மண்ணெண்ணெய் முதலிய தேவைப் பண்டங்கள் பூராவையும் சர்க்காரே நியாய விலைக்கு கொள்முதல் செய்து நியாயமான விலைக்கு மக்களுக்கு வினியோகிக்க ஏற்பாடு செய்ய வேண்டும்.

(ஆ) பொருள்களின் மீது போடப்பட்டுள்ள வரிகள் குறைக்கப்பட வேண்டும்; பணவீக்கத்தை ஏற்படுத்துகின்ற அளவிற்கு நோட்டு அச்சடிக்கப்படுவது அறவே கைவிடப்படவேண்டும். முதலாளிகளிடமிருந்து வசூலிக்கப்பட வேண்டிய வரிபபாக்கிகளை வசூலித்தால் இதுமுற்றிலும் சாத்தியம்.

(இ) கருப்புப் பணத்திற்கும், அதனுல் ஏற்படும் கருப்பு பொருளாதாரத்திற்

(4-ஆம் பக்கம் பார்க்க)

## தீக்கதிர் நாளிதழ் புதிய விலை ஓர் அறிவிப்பு அக். 1 முதல் விலை 15 காசுகள்

தோழர்களே,

தமிழ்நாட்டில் இன்று நமது தீக்கதிர் ஒன்றுதான் 13 காசுக்கு விற்கப்படுகிறது. இதர அனைத்து தமிழ் ஏடுகளும் 15 காசாக, 16 காசாக இருப்பது உங்களுக்குத் தெரியும். விலைவாசி உயர்வு என்பது நமது பத்திரிகையையும் பாதிக்கிறதல்லவா?

இந்நிலையில் வருகிற அக்டோபர் முதல் தேதியில் இருந்துதீக்கதிரின்விலையை15காசாக ஆக்குவதெனறு செப். 19,20 தேதிகளில் கூடிய தமிழ் மாநிலக் குழு முடிவு செய்கிறது. இதை நீங்கள் இன்முகத்துடன் ஏற்பீர்கள் என்பதில் எங்களுக்குச் சந்தேகமில்லை. தொடர்ந்து தீக்கதிரை வாங்கி ஆதரவளிக்குமாறு வேண்டுகிறோம்.

ஏற்கனவே அறிவித்துள்ளபடி ஏஜண்டுகள் அக்டோபர் 15ந்தேதிக்குள் டிபாசிட்டை பிரதி ஒன்றுக்கு ரூ. 3—50 என்ற அளவுக்கு உயர்தத வேண்டும் இதை மறந்துவிட வேண்டாம். பின்னர் அடுத்த ஜனவரி 31 தேதிக்குள் இதை ரூ. 4—50 என்ற அளவுக்கு உயர்தத வேண்டும். இதற்கு வேண்டிய திட்டமிட்ட ஏற்பாடுகளைச் செய்யுமாறு வேண்டுகிறோம்.

தோழமையுள்ள,

**ஏ. பாலசுப்ரமண்யம்,**
செயலாளர்,
தமிழ் மாநிலக் குழு,
இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)

## "தீக்கதிர்" வளர்ச்சி நிதி ரூ. 50 ஆயிரம் தாரீர்

தோழர்களே - நண்பர்களே,

நமது "தீக்கதிர்" நாளிதழ் 1971 ஆகஸ்ட் 20ல் தொடங்கி ஓராண்டு நிறைவுபெற்றுள்ளது.

இந்த ஓராண்டு காலத்தில் "தீக்கதிர்" ஆற்றியுள்ள அரும்பெரும் பணிகளை இந்நாடு நன்கறியும்.

இந்நாட்டில் அடக்கப்பட்ட — ஒடுக்கப்பட்ட —சுரண்டப்பட்ட மக்கள் தங்களது வேதனைக் குரலை எழுப்பியபோது, அதனைக் காது கொடுத்தும் கேட்காத—அதைப் பிரதிபலிக்காத நாளேடுகள் வந்து கொண்டிருந்தசூழ்நிலையிலே நமது தீக்கதிர் நாளேடு ஒன்றுதான் அவர்களது குரலாக—இதயகீதமாக விளங்கியது.

உழைக்கும் மக்களின் வலிமைமிக்க ஆயுதம்இது என்பதையும் அவர் தம் நிலையிலிருந்து—மாநில, தேசிய, சர்வ தேசிய பிரச்சினைகள் அனைத்திற்கும் வழி காட்டும் ஒரு நாளேடு இது என்பதனையும் நடுநிலையாளர்களும் ஒத்துக் கொள்வர்.

தொழிலாளர்கள், விவசாயிகள், மாணவர்கள், ஆசிரியர்கள், அரசு ஊழியர்கள், மற்றும் கருத்தாலும், கரத்தாலும் உழைக்கும் அனைத்துப் பகுதி மக்களின் நம்பிக்கைக்குரிய நண்பனுக விளங்குகிறது என்பதை அனைவரும் ஒப்புக் கொள்வர்.

ஒரே ஒரு உதாரணம். அண்மையில் நடந்து முடிந்த சிமெண்டுத் தொழிலாளர் போராட்டத்தை எடுத்துக் கொள்வோம். துரோகம் தலைதூக்கி நின்ற சமயத்தில் தீக்கதிர் ஒன்றுதான் அவர்களது உற்ற நண்பனுக இருந்தது என்பதை அத்தொழிலாளர்கள் அறிவர்.

இது அண்மையில் ஏற்பட்ட அனுபவம். இதே போல் எத்தனையோ உதாரணங்களைக் கூறமுடியும்.

பாட்டாளி வர்க்க சர்வ தேசியத்தின் வழி நின்று— மார்க்சிசம் லெனினிசத்தின் மங்கா ஒளி வெளிச்சத்தில் நின்று— அந்த மகத்தான கொள்கைகளில்— சித்தாந்தங்களிலிருந்து தடம் புரண்ட வலது, இடது திரிபுகளை— சறுக்கல்களை எதிர்த்து உறுதியாகப் போராடி, மார்க்சிச— லெனினிசத்தின் புனிதத்தைப் பாதுகாக்கப் போராடிவரும் ஒரே ஏடு தீக்கதிர்.

இந்திய அரசியலில் ஆளும் வர்க்கங்களின் சாகசங்கள் எதற்கும இரையாகாமல், நமது இயக்கத்தின் தனித்தன்மையையும் புரட்சித் தன்மையையும் பாதுகாத்து வளர்த்து வரும் பணியில் ஈடுபட்டுவரும் நமது கட்சியின் இந்த ஏடு, சிக்கல் மிகுந்த அரசியல் சூழ்நிலையில் தெளிவான பாதையைக் காட்டவேண்டிய மாபெரும் பணியினைச் செய்துவருகின்றது.

இதுவரை தீக்கதிர் ஆற்றிய பணிகளையும், ஆற்றிவரும் பணிகளையும் குறிப்பிடும் அதே சமயத்தில், நமது நாளிதழ்போன்ற இதழுக்கு, முதலாளித்துவப்போட்டிச் சூழ்நிலையில் பல இடையூறுகளைச்சமாளிக்க வேண்டிய ஒரு நிலைமை இருக்கிறது என்பதை அனைவரும் உணர வேண்டும்.

எதிரிகளின் சாகசங்களை முறியடித்துமுன்னேறுவதற்கும் — மேலும் வளர்வதற்கும் மேற்கொள்ள வேண்டிய பணிகளை சிறப்புற நிறைவேற்றுவதற்கும்

**★ தோழர்களே,**
**★ கட்சி உறுப்பினர்களே,**
**★ ஆதரவாளர்களே,**
**நண்பர்களே**

உங்களுடைய உறுதியான ஆதரவைநாடுகிறோம்.

இந்த ஆதரவு இல்லையெனில், தீக்கதிர் தலை நிமிர்ந்து நின்று போராட இயலாது. இன்றைய தீக்கதிர் நாளிதழை உருவாக்கியவர்கள் நீங்கள். இன்றைய சூழ்நிலையில் அதன் சிரமங்களைச் சமாளித்து, மேலும் அதனை முன்னேற்றவேண்டியதும் நீங்கள்தான்.

"தீக்கதிர்" வளர்ச்சிக்கு ரூபாய் 50 ஆயிரம் தேவைப்படுகிறது. பிள்ளை பசிக்கிறது என்றுல் தாயின் முகத்தைத்தானே பார்க்கும் அதுபோல் தீக்கதிரின் தாயாக விளங்கும் இலட்சோப லட்சக்கணக்கான தொழிலாளர்களையும்—ஏனைய உழைக்கும் மக்களையும் தோழர்களையும் வேண்டுகிறோம்.

அடுத்த நான்கு மாதங்களுக்குள் இந்த ரூபாய் 50 ஆயிரமும் உடனடியாகத் தேவைப்படுகிறது.

இந்த வசூலுக்கான திட்டம்தீட்டி கட்சிக்கமிட்டிகளும், ஒவ்வொரு கட்சிக் கிளையும் தங்களது "கோட்டா"க்களை நிறைவேற்றித்தரவேண்டும் என்று இந்திய கம்யூனிஸ்ட்கட்சி (மார்க்சிஸ்ட்)யின் தமிழ் மாநிலக்குழு வேண்டுகிறது.

இப்பணியினை சிறப்பாக— விரைவாக நடத்தி முடிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறோம்.

ஐம்பதாயிரம் தாரீர்! அதனையும் துரிதமாகவே தந்திடுவீர்என வேண்டுகிறோம்.

**—தமிழ் மாநிலக் குழு**
**இந்திய கம்யூனிஸ்ட்கட்சி (மார்க்சிஸ்ட்)**

## பீகாரை பஞ்சப் பிரதேசமென்று அறிவிக்க முடியாதாம் இந்திரா காந்தி அறிவிப்பு

பாட்னு, செப். 19—

பீகாரைப் பஞ்சப் பிரதேசமென்றுஅறிவிக்கவேண்டும் என்ற யோசனையை பிரதமமந்திரி இந்திராகாந்தி நிராகரித்தார். அவர் பஞ்சப் பிரதேசத்தில் ஒருநாள் சுற்றுப் பிரயாணம் செய்து கயாவிலும், தர்பங்காவிலும் பேசினர்.

அப்போது "பஞ்சப் பிரதேசமென்று அறிவிப்பதால் எந்தப் பயனும் கிடையாது. பஞ்சப் பிரதேசமென்று அறிவிக்கும் சட்டம் பிரிட்டிஷ் அரசாங்கத்தினுல் ஏற்படுத்தப்பட்டது. பட்டினிச் சாவுகள் ஏற்பட்டால், பஞ்சப் பிரதேசமென்று அறிவிக்கவேண்டுமென்று அந்த சட்டம் கூறுகிறது. பீகாரில் அத்தகைய நிலைமை இல்லை" என்று அவர் கூறினர்.

தற்போதைய நிலையை சமாளிக்க மத்திய அரசு உணவு சப்ளை செய்யுமென்று கூறினர். ஆயினும் செப்டம்பரில் ஒன்னரை லட்சம் டன்னும், அக்டோபரில்இரண்டுலட்சம்டன்னும் உணவு தானியம் அனுப்பி வைப்பது பற்றி தன்னைக் கட்டுப்படுத்திக்கொள்ள வில்லை. ரூ. 102 கோடி நிவாரண உதவி அளிக்க வேண்டுமென்ற கோரிக்கையையும் அவர் தட்டிக் கழித்தார். எவ்வளவு முடியுமோ அவ்வளவு அனுப்பி வைக்கப்படும் என்றே அவர் கேள்விகளுக்குப் பதிலளித்தார்.

பிரதமமந்திரி தங்கியிருந்த ராஜ்பவன் அருகே மறியல் செய்த 3 எம். எல். ஏக்கள் ஒரு முன்னுள் எம். பி. உள்பட 70 சோஷலிஸ்டுகளை போலீசார் கைதுசெய்தனர்.

பஞ்சப்பிரதேசமாக அறிவிக்க முடியாது என்று பிரதமர் கூறிய அதே பதிலை வலது கம்யூனிஸ்ட்டுகளிடம் முதலமைச்சர் கேதார் பாண்டே அறிவித்தார். பெரும் ஊர்வலம் ஆர்ப்பாட்டம்ஒன்றை நடத்திய வலது கம்யூனிஸ்ட்டுகளிடம் கேதார்பாண்டேதந்த பதில் இது.

### 700 ஆசிரியர் கைது

ஆரம்ப ஆசிரியர்கள் போராட்டம் தொடருகிறது. இன்று 700 ஆசிரியர்கள் கைது செய்யப்பட்டனர்.

## மார்க்சிஸ்ட் கட்சித் தலைவர்கள் மீது தாக்குதலுக்கு எதிர்க்கட்சி தலைவர்கள் கண்டனம்

புதுடில்லி செப் 22-

மார்க்சிஸ்ட்கட்சி தலைவர்களான தோழர்கள் ஜோதி பாசுவையும, ஜோதிர்மாய் பாசுவையும் கல்கத்தா அருகே செப் 17ம் தேதி காங்கிரஸ் குண்டர்கள் தாக்கியதை எதிர்க் கட்சித் தலைவர்கள் இன்று வன்மையாகக் கண்டித்தனர்.

### தலைவர்கள் கண்டனம்

நாடாளுமன்ற மத்திய மண்டபத்தில் விசேடமாகக் கூட்டப்பட்ட நிருபர்கள் கூட்டத்தில் எதிர்க்கட்சித் தலைவர்கள் பேசினர். நாட்டில் பாசிஸ்ட் போக்குகள் வளருவதாக அவர்கள் அரசாங்கத்தின் மீது குற்றம் சாட்டினர்.

நாட்டில் பொருளாதார நெருக்கடி ஆழமாகி வருவதைத் தடுக்க முடியாத நிலையில், ஆளும் கட்சி இத்தகைய வன்முறையில் ஈடுபடுவது அதிகரிக்கக்கூடும் என்று சுதந்திரா கட்சித் தலைவர் பிலுமோடி, இரா. செழியன் (தி. மு. க.), எஸ். என். மிஸ்ரா, [ஸ்தாபன காங்கிரஸ்), கோலாப்பார் பரா (சோசலிஸ்ட கட்சி). எம். எம். ஜோசப் (கேரள காங்கிரஸ்) மாத்யூகுரியன் (மார்க்சிஸ்ட் கட்சி) ஆகியோர் அச்சம் தெரிவித்தனர்.

மார்க்சிஸ்ட் கட்சித் தலைவர்கள் தாக்கப்பட்டது தனியானதொரு சம்பவம் அல்ல என்றும் மேற்கு வங்காளத்தில் தம் கட்சிக்காரர்களும் தாக்கப் பட்டிருப்பதாக ஸ்தாபன காங்கிரஸ் தலைவர் எஸ். என். மிஸ்ரா கூறினர்.

மக்கள் ஜனநாயக உரிமைகளுக்குப்போராடிக்கொண்டிருக்கும்போது ஜனநாயக முகமூடி தரித்துக்கொண்டு அரசாங்கம் ஜனநாயகத்துக்கேகுழிபறித்துக்கொண்டிருப்பதாக பிலுமோடி குற்றம் சாட்டினர்.

இந்தக் தாக்குதலுக்குக் காரணமானவர்கள் கண்டிக்கப்படாவிட்டால் ஜனநாயக முறையே அழிந்துவிடும்என்று இரா.செழியன் கூறினர்.

ஜோதிபாசு போன்ற தலைவர்களுக்கே பாதுகாப்பு இல்லை என்றுல் சாதாரண ஊழியர்களின் நிலை என்ன என்று பார்பரா (சோஷலிஸ்ட்) கேட்டார்.

இத்தகைய போக்குகள் வளருவதற்கு எதிராக மக்கள் உணர்வைத் தட்டி எழுப்பவேண்டும் என்று தோழர் மாத்யூ குரியன் கூறினர்.

### சபாநாயகருக்கு ஜோதிர்மாய் கடிதம்

இந்தத் தாக்குதல் சம்பந்தமாக மேற்கு வங்க அரசுக்கு கடிதம் எழுதிசம்பந்தப்பட்ட போலீஸ் அதிகாரிகளிடமிருந்து விளக்கம்பெறுமாறு நாடாளுமன்ற சபாநாயகருக்கு எழுதிய கடிதம் ஒன்றில் கேட்டிருப்பதாகவும் தோழர் ஜோதிர்மாய்பாசு கூறினர். கூட்டத்தில் பிரதம மந்திரியைத் தாமோ அல்லது தோழர் ஜோதிபாசுவோ தனிப்பட்ட முறையில் தாக்கவில்லை என்றும் காங்கிரஸ் கொள்கைகளையே தாக்கியதாகவும் தோழர் ஜோதிர்மாய்பாசு விளக்கினர்.

நாட்டில் சர்வாதிகாரப் போக்கு வளருவதுபற்றி எதிர்க்கட்சித் தலைவர்கள் இக் கூட்டத்தில் மக்களுக்கு எச்சரிக்கை ஒன்றும் விடுத்தனர்.

# தீக்கதிர்

## இந்திராவின் சவால்

யுத்தம் ஏற்பட்ட போதெல்லாம் விலைவாசிகள் ஏறுகின்றன. 1962வது ஆண்டு இந்திய-சீன யுத்தம் முடிந்தவுடனும், 1965 இந்தியா—பாக் யுத்தத்திற்கு பிறகும் இது நடந்திருக்கிறது. சமீபத்தில் நடந்த இந்தியா—பாக். யுத்தத்திற்குப் பிறகும் இதுதான் நடந்திருக்கிறது என்று பாட்னாவில் பிரதமர் இந்திரா காந்தி கூறியிருக்கிறார்.

இது ஒன்றும் பெரிய ஆராய்ச்சியின் விளைவாக ஏற்பட்ட கண்டுபிடிப்பல்ல. சாதாரண மக்களுக்குத் தெரியும். யுத்தம் வந்தால், தேசபக்தி என்ற பேரால் அவர்கள் தலையில் ஏராளமான வரிச்சுமை விழும். தியாகம் செய்ய வேண்டும் என்று ஓயாமல் அவர்களுக்கு ஆளுவோர் பாடம்புகட்டுவர். ஆனால் பெரு முதலாளிகளுக்கும் கொள்ளை லாப வேட்டைக்காரர்களுக்கும் கொண்டாட்டம்.

இந்த உண்மையைத் தெரிந்துகொண்டுள்ள இந்திராகாந்தி அரசு இந்தியா-பாக். யுத்தம் நடந்தவுடன் இந்தநிலை வளராமலிருக்க ஏன் நடவடிக்கை எடுக்கவில்லை?

யுத்தம் சென்ற ஆண்டு டிசம்பர் 18ந் தேதியன்றே முடிந்து விட்டது, யுத்தச் செலவுகளுக்காகவும், அகதிகளை பாதுகாக்கவும், சென்ற ஆண்டும் இந்த ஆண்டும் வரிகள் போடப்பட்டன. அச் செலவுகளுக்கு மேலே அதிகமாகவே மக்கள் அள்ளிக் கொடுத்து விட்டார்கள்.

அதற்குமேல், பற்றுக்குறை ரெவு செலவுத் திட்டத்தைத் தயாரித்து, நோட்டுகளை அச்சடித்து சர்க்கார் வெளியிட்டது ஏன்? பெரு முதலாளிகள் கொடுக்க வேண்டிய வரி பாக்கி ரூ 650 கோடிக்கு மேல் இருக்கிறது என்று அமைச்சர் கே. ஆர். கணேஷ் நாடாளுமன்றத்தில் கணக்கு கொடுத்தாரே? அதை வசூல் செய்ய என்ன தடை? யார் குறுக்கே நிற்கிறார்கள்? சிறு விவசாயி வரி பாக்கி வைத்திருந்தால், கடன்பாக்கி வைத்துவிட்டால், அவனுடைய ஆடுமாடுகளையும், தட்டுமுட்டுச் சாமான்களையும் ஜப்தி செய்யும் அரசு முதலாளிகளிடம் வரி பாக்கியை வசூல் செய்யாமலிருப்பதேன்? அவர்களிடம் சொத்து இல்லையா? அந்தப் பாக்கியை வசூல் செய்திருந்தால் நோட்டு அச்சடிக்க வேண்டியிருக்காதல்லவா?

கணக்குக் கொடுக்காமலிருக்கும் கள்ளப் பணத்திற்கு ஆண்டுக்கு 1,400 கோடி வரி கொடுக்காமல் சர்க்காரை ஏமாற்றுகிறார்கள் என்று வாஞ்சு கமிட்டி கூறியிருக்கிறது. இந்தப் பேர்வழிகள் யார்? சாதாரண மக்களா? டாடா, பிர்லா போன்ற பெரு முதலாளிகளும் ஏனைய கொள்ளைக் கூட்டங்களும்தானே? அவர்களை ஏன் அரசு ஆட்சி விட்டு வைத்திருக்கிறது?

மேலும் அதிகமான நியாயவிலைக் கடைகள் திறக்கவேண்டுமாம். அவைகளில் நியாய விலைக்கு அத்தியாவசிய பொருள்களை விற்க வேண்டுமாம். வினியோக முறையில் சீர்திருத்தங்கள் தேவையாம். இவ்வாறு இந்திராகாந்தி பேசியுள்ளார்!

இதையெல்லாம் பேசும் இந்திராகாந்தி யுத்தம் முடிந்த 9 மாதங்களுக்கு மேலாகியும் ஏன் அதன்படி நடவடிக்கை எடுக்கவில்லை?

இந்த லட்சணத்தில் கிளர்ச்சிகள் ஒன்றும் கூடாது என்கிறார் திருமதி இந்திரா காந்தி. கிளர்ச்சிகளினால் விலை இறங்காது என்றும் கூறியுள்ளார். அதாவது கிளர்ச்சிகளினால் தன் கொள்கையை மாற்றிக்கொள்ளப் போவதில்லை என்று மக்களுக்குச் சவால் விடுகிறார். இந்தச் சவாலை மக்கள் ஏற்பார்கள் என்பது உறுதி.

## சபாஷ் மாதவன்!

மத்தியத் தொழில் வளர்ச்சி அமைச்சர் திரு. சி.சுப்பிரமணியம், மாநிலதொழில் அமைச்சர்களின் மாநாட்டை செப்டம்பர் 20-ம் தேதி புதுடெல்லியில் கூட்டினார். அம் மாநாட்டில் மத்திய அரசு ஏகபோக குடும்பங்களின் தொழில்களை, அவர்களுடைய ஆஸ்தியின் முக்கியத்துவத்தையே அடிப்படையாகக் கொண்டு அரசு உடைமையாக்கிக்கொள்ள வேண்டும் என்று தமிழக அமைச்சர் மாதவன் கூறினார்.

மேலும், பல்வேறு தொழில்துறைகளில் நடவடிக்கைகளை விஸ்தரிக்க ஏகபோக குடும்பங்கள் விரும்புவதை எந்த மாநில அரசும் ஆதரிக்காது என்று உறுதியும் கூறினார்.

இதைப்படித்தும் சாதாரண மக்களுக்கு மாதவனைப் பாராட்டத்தான் தோன்றும்.

ஆனால் அதே மூச்சில் திரு. மாதவன் கூறியிருப்பதைப் பாருங்கள். "ஏகபோகக் குடும்பங்களிடம் அதிகமான நிர்வாகத்திறமையும், நிதிவசதியும், வியாபார சாதனங்களும், தொழில் நுட்பத்திறனும் உள்ளன என்பதை மத்தியஅரசு உணரவேண்டும். எனவே இக்குடும்பங்களின் தொழில் விஸ்தரிப்பைத் தடுப்பதில் எவ்விதப் பிரயோசனமும் இல்லை."

இதுவே மாதவனின் திடமான ஆலோசனை!

சர்க்காரின் நிதி நிறுவனங்களிலிருந்தும், பாங்கிகளிலிருந்தும் தங்குதடையின்றி கிடைக்கும் நிதி வசதிகளைத் தவிர வேறு என்ன இந்தக் குடும்பங்களின் கையில் உள்ளன?

எல்லாப் பொருளுக்கும் தட்டுப்பாடு ஏற்பட்டுள்ள இந்திய மார்க்கெட்டில், வியாபாரத்திற்கான விசேஷ அமைப்பு என்று ஒன்று தேவைப்படுகிறதா என்ன? அயல்நாட்டு ஏகபோகமுதலாளிகளிடமிருந்து அநியாய விலை கொடுத்துவாங்கும் தொழில்நுட்பத்தைத் தவிர இவர்களிடம் என்ன தொழில் நுட்பம் இருக்கிறது?

"இந்த உண்மைகளை எல்லாம் மறைத்து நமக்காக திறமையாக வாதாடியிருக்கிறார்களே! சபாஷ்! மாதவன்!" என்று டாட்டா, பிர்லாக்கள் மாதவனைப் போற்றுவார்கள் என்பதில் சந்தேகம் இல்லை.

# சி. ஐ. டி. யூ. தமிழ்மாநிலக் குழு முடிவுகளும் தீர்மானங்களும்

மதுரை, செப். 21—

சி. ஐ. டி. யூ. தமிழ் மாநிலக் குழுவின் கூட்டம் இம்மாதம் 14 முதல் 17தேதி வரை குமரி மாவட்டத்தில் உள்ள திருவெட்டாரில் நடைபெற்றது. தோழர் கே. ரமணி தலைமை வகித்தார். குழு உறுப்பினர்கள் தோழர்கள் உமாநாத், நல்லசிவன், கார்மேகம், ஹேமச்சந்திரன், சொரணம், காரைக்குடி காசிநாதன், வி. பாலகிருஷ்ணன், எஸ். ஏ. தங்கராஜன், பாரதிமோகன், டி. பி. கோவிந்தன், எஸ். வீரபத்திரன், ஹரிபட், டி. ஜானகிராமன், நஞ்சப்பன், பாலன், குட்டன், பி. சி. வேலாயுதம் வீ. ராமசாமி, சி. கே. ரெங்கசாமி. ஆகியோர் கலந்து கொண்டனர்.

சி. ஐ. டி. யூ. பொதுச் செயலாளர் தோழர் பி. ராமமூர்த்தியும் கலந்து கொண்டார். தலைவரின் முன்னுரைக்குப் பின். நாட்டின் மோசமாகிவரும் பொருளாதார நிலைமைபற்றியும், தொழிலாளி வர்க்க கூட்டு நடவடிக்கைகளின் அவசியம், அரசியல்கடமைகள்பற்றியும். வெகுஜன ஸ்தாபனங்களை பலப்படுத்த வேண்டியதன் அவசியம் பற்றியும் தோழர்ராமமூர்த்தி ரிப்போர்ட் பண்ணினார்.

சென்ற கூட்ட முடிவுகளை அமுல் நடத்தியதில், பல்வேறு துறைகளில் ஏற்பட்ட முன்னேற்றங்கள் — குறைபாடுகள் — பலவீனங்கள் அவற்றிற்கான காரணங்கள் இடைக்காலத்தில் நடந்துள்ள பிரதான போராட்டங்கள் ஆகியவை பற்றி மாநிலக் குழுவின் உதவிச் செயலாளர் தோழர் நல்லசிவன் ஓர் அறிக்கை சமர்ப்பித்தார்.

சமீபகால போராட்டங்களில் கிடைத்துள்ள பல்வேறு அனுபவங்கள், களைந்தெறியப்படவேண்டிய சில ஸ்தாபன பலவீனங்கள், உடனடிக் கடமைகள் ஆகியவைபற்றி செயலாளர் தோழர் உமாநாத் ஒரு அறிக்கை சமர்ப்பித்தார்.

இவற்றின்மீது விவாதங்கள் நடைபெற்றபின் இயக்க சம்பந்தமான முடிவுகளும் தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன.

பின்னர் வரவு-செலவு கணக்குகள் சமர்ப்பிக்கப்பட்டு ஏற்றுக்கொள்ளப்பட்டன.

### முடிவுகள்:-

பிரதான முடிவுகளும் தீர்மானங்களும் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

### தென்வியட்நாமிய புரட்சி அரசு

தென்வியட்நாமிய புரட்சி அரசை மத்திய அரசு உடனே அங்கீகரிக்க வேண்டும் என்று கோரும் விண்ணப்பத்தில்தமிழகத்தில் 2லட்சம தொழிலாளர்களின் கையெழுத்துக்களைப்பெற்று, வரும் பார்லிமெண்ட் கூட்டத்தில் சமர்ப்பிப்பதென்று முடிவு செய்யப்பட்டது. இந்த கையெழுத்துக்கள் 1972 நவம்பர் மாத முடிவுக்குள் மாநில மையத்துக்கு வந்துவிட வேண்டும்.

### மேற்கு வங்கத்தில்

மேற்கு வங்கத்தில் தொடர்ந்து நடைபெற்று வரும் பாசிஸ அடக்கு முறையை கண்டித்து தமிழ் நாட்டில் பிரசாரம் செய்வதோடு, மேற்கு வங்க ஜனநாயக இயக்க ஆதரவு நிதி வசூலில் பாக்கியுள்ள "கோட்டா" பணத்தை நவம்பர் முதல் வாரத்துக்குள் மாநில மையத்துக்கு அனுப்பி வைக்கவேண்டும்.

### மேற்கு வங்க அரசியல் கைதிகள்

மேற்குவங்க அரசியல்கைதிகளை மேற்கு வங்கத்துக்கே மாற்றும்படி மத்திய அரசின் உள்நாட்டு இலாகாவுக்கு எல்லா தொழிற் சங்கங்களும் தந்திகள் அனுப்பி வைக்கவேண்டும்.

### போனஸ்

போனஸ் பற்றிய பிரச்னையில், தனியார் துறை, பொதுத்துறை. அரசு இலாக்காக்கள் என்ற வித்தியாசமின்றி, லாப நஷ்டத்தை கருத்தில்கொள்ளாதுவேலைசெய்பவர்களின் எண்ணிக்கை, பாக்டரி சட்டம் பொருந்துமா போன்ற பிரச்னைகளைக் கவனிக்காமல், சகல தொழிலாளர்களுக்கும் சிப்பந்திகளுக்கும் $8\frac{1}{3}$ சதவிகித குறைந்த பட்ச போனஸ் வழங்கவும், 20 சதவிகித உச்சவரம்பை நீக்கவும் உடனடியாக அவசரச் சட்டம் பிரகடனம் செய்யுமாறு மத்திய அரசையும், இதை வற்புறுத்துமாறு மாநில அரசையும் கோரி இயக்கம் கிளர்ச்சி நடத்துவது. போனஸ் பிரச்னையில் இத்தகைய அவசரச் சட்டம் கொண்டுவரத் தவறினால், தமிழ்நாட்டில் தொழிலாளர்களின் ஒன்றுபட்ட வேலைநிறுத்தம் நடத்தி அரசை நிர்ப்பந்திப்பதென்றும் அதற்கு இதர தொழிற் சங்கங்களின் ஒத்துழைப்பைப்பெற முயற்சிப்பதென்றும் முடிவு செய்யப்பட்டது.

### விலைவாசி உயர்வு-வேலையின்மை எதிர்ப்பு இயக்கம்

இப்பிரச்னைகளில், பின் கண்ட 5 அம்ச கோரிக்கைகளை மத்திய, மாநில அரசுகள் அமுல் நடத்த வேண்டுமென்று கோரி இயக்கம் நடத்துவது.

### கோரிக்கைகள்

(அ) அத்தியாவசியப் பண்டங்களின் கையிருப்பு முழுவதையும் தனியார்களிடமிருந்து அரசாங்கமே கைப்பற்றி நியாய விலையில் விற்பதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும். (ஆ) அத்தியாவசியபண்டங்களின்மீது வரி விதிப்பதை நிறுத்துவதோடு பற்றுக்குறை நிதியைச்சரிக்கட்ட நோட்டு அச்சிடுவதையும் நிறுத்தவேண்டும். (இ) ஏகபோக முதலாளிகளின் கம்பெனிகளையும், உணவு தானிய மொத்த வியாபாரத்தையும் அரசு மேற்கொள்ள வேண்டும். (ஈ) வேலையில்லாதோருக்கு ரொக்க நிவாரணம் வழங்க மத்திய, மாநில அரசுகள் பொறுப்பேற்க வேண்டும் (உ) வேலை வாய்ப்புரிமை அடிப்படை உரிமையாக ஏற்கப்பட்டு, அரசியல் சட்டத்தில் தகுந்த திருத்தம் செய்யப்பட வேண்டும்.

இவற்றை வற்புறுத்தி, அக்டோபர் இரண்டாவது வாரத்தில் அரசு அலுவலகங்களின் முன்பு வெகுஜன மறியல் நடைபெறுவதற்கு சி. ஐ. டி. யூ. சங்கங்கள் ஏற்பாடு செய்ய வேண்டும். இதற்கான பிரசாரம் மற்றும் தயாரிப்புகளில் உடனே ஈடுபடுவதுடன்ஸ்தலத்திலுள்ள இதர தொழிற் சங்கங்கள் இடதுசாரி. ஜனநாயகசக்திகளை அணுகி ஒன்றுபட்ட நடவடிக்கைகளுக்கு வருமாறு அழைக்க வேண்டும்.

இந்த இயக்கத்தை மாநில ரீதியான அடையாளவேலை நிறுத்தம், ஹர்த்தால் முதலிய போராட்டங்களை நோக்கி வளர்த்துச் செல்ல வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது.

### பஞ்சாலை அரங்கம்

பஞ்சாலைத் தொழிலாளர்களின்சென்ற பொதுவேலை நிறுத்தத்தின்போதுதொழிற் சங்கப் பிரதிநிதிகளுடன் செய்து கொள்ளப்பட்ட ஒப்பந்தம் அமுலாக்கப் படுவது பற்றி பரிசீலிக்கவும், குறைந்தபட்ச நியாயச் சம்பள விகிதங்களை உருவாக்கி கன்சிலியேஷன் போர்டு முன்பு சமர்ப்பிப்பது பற்றி பரிசீலிக்கவும் பஞ்சாலைத் தொழிற்சங்க பிரதிநிதிகளின் கூட்டத்தை அக்டோபர் மாதம் 7, 8 தேதிகளில் மதுரையில் கூட்டுவது என்று முடிவு செய்யப்பட்டது.

### தோட்டத் தொழிலாளர் பிரச்னை

கேரளத்தில் தேயிலைத் தொழிலாளர்களுக்குக் கிடைக்கும் சம்பளம் தமிழ்நாட்டுத் தொழிலாளர்களுக்கும் கிடைக்க நடவடிக்கை எடுத்தல். குமரி மாவட்ட ரப்பர் தோட்டத் தொழிலாளர்கள் கேரளத்தில் கிடைக்கும் சம்பளம் கோரி நடத்தவிருக்கும் வேலை நிறுத்தத்துக்கு ஆதரவு கொடுப்பதென்றும், முடிவு செய்யப்பட்டது.

### காண்ட்ராக்ட் தொழிலாளர்முறை

காண்ட்ராக்ட் தொழிலாளர் முறை (ஒழிப்பு, ஒழுங்குபடுத்தல்) சட்டத்தின் கீழ் இயற்ற வேண்டிய விதிகளை உடனே இயற்றி அச்சட்டத்தைத் தமிழகத்தில் அமுலாக்கும்படி தமிழக அரசை வற்புறுத்தி தீர்மானங்கள் அனுப்புவதோடு, விரிவான பிரசாரம், கிளர்ச்சியில் சி. ஐ.டி.யூ. சங்கங்கள் ஈடுபடவேண்டும். 1973 ஜனவரியில் சேலத்தில் காண்ட்ராக்ட் வேலைமுறை ஒழிப்பு மாநாடு நடத்துவதென்று முடிவு செய்யப்பட்டது

### முனிசிபல் சிப்பந்திகள்

முனிசிபல் சிப்பந்திகள் சங்கப் பிரதிநிதிகளின் கூட்டத்தை அக்டோபர் முடிவுக்குள் திண்டுக்கல்லில் நடத்தி, கோரிக்கைகளை உருவாக்குவதுடன் இயக்கத்திற்கும் திட்டமிட வேண்டும்.

### பாண்டியன் ரோடு கார்ப்பரேஷன் தொழிலாளர்

பாண்டியன் ரோடு வேஸ் கார்ப்பரேஷன்தொழிலாளர் சங்க மாநாட்டை அக்டோபர் 15ல் மதுரையில் நடத்துவதென்றும் அதற்கு மற்ற மாவட்டங்களிலிருந்து தனியார் துறை மோட்டார் தொழிற்சங்கப் பிரதிநிதிகள் அனுப்பி வைக்கப்பட வேண்டுமென்றும் முடிவு செய்யப்பட்டது.

### உறுப்பினர் தொகையை உயர்த்துக

இணைக்கப்பட்ட சங்கங்கள், தங்களின் 1971ம்வருட உறுப்பினர் தொகையில் 25 சதவீத உயர்வை1972ல்ஏற்படுத்த வேண்டு மென்றும 1972 உறுப்பினர் தொகையில் 50 சதவிகித உயர்வை 1973ல் ஏற்படுத்த வேண்டுமென்றும் முடிவு செய்யப்பட்டது.

1972-ம் வருடத்தில் இணைக்கப்பட்ட சங்கங்கள் வசூலிக்கும் போனஸ் நன்கொடையில் 10 சதவிகிதத்தை மாநிலக் குழுவுக்கு கொடுக்க வேண்டும். சென்ற வருட வசூலில் 8 சதவிகிதம் பணம் தராத சங்கங்கள் அந்த பாக்கியையும் சேர்த்து இந்த வருடத்தில் கொடுக்க வேண்டும்.

சி. ஐ. டி. யூ. வின் ஆங்கில மாதப் பத்திரிகையான 'ஒர்க்கிங்கிளாஸ்"க்கு ஆண்டு சந்தா 5ரூபாயை ஒவ்வொரு இணைக்கப்பட்ட சங்கமும அக்டோபர் 10க்குள் செலுத்திவிட வேண்டும்.

கைத்தறி நெசவாளர்களின் செப்டம்பர் 29-ல் கோரிக்கை தின ஆர்ப்பாட்டங்களையும், மின்வாரியத் தொழிலாளர்களின் அக்டோபர் 4 கோரிக்கை தின ஆர்ப்பாட்டங்களையும் 20—9—72ல் ஆரம்பமாகவிருக்கும் தோல் பதனிடும் தொழிலாளர் வேலை நிறுத்தத்தையும் பூரணமாக ஆதரிப்பதென்று முடிவு செய்யப்பட்டது.

### முக்கிய தீர்மானங்கள்

(1) சிம்சனில்சஸ்பெண்ட் செய்யப்பட்ட 400 தொழிலாளர்களையும் மீண்டும் வேலைக்கு எடுக்கும்படி நிர்வாகத்தையும், மாநில அரசையும் வற்புறுத்தியும் (2)ரயில்வேலோக்கோமென் வேலை நிறுத்தத்தை பாதுகாதுகாப்பு சட்டத்தின் கீழ் தடைசெய்து தொழிலாளர்கள் கைது செய்யப்பட்டதையும்— ஸ்டிரைக் வாபஸ் குறித்து தொழிற் சங்கத்தலைவர்களிடம் சிறையில் கையெழுத்து வாங்கப்பட்டதையும் கண்டித்தும் த(3) தொழிலாளர்நலன்கள் சம்பந்தமாக அரசு அமைக்கும்பல்வேறு கமிட்டிகளில் சி.ஐ.டி.யூ. வுக்கு பிரதிநிதித்துவம் அளிக்கும்படி தமிழக அரசைக் கோரி,யும்

(4) சங்ககிரி சிமெண்டாலையில் பழிவாங்கப்பட்டுள்ள 24தொழிலாளர்களை மீண்டும் வேலைக்கு எடுக்கும் பிரச்னையில் முதலமைச்சர் தலையிட வேண்டுமென்று கோரியும்,

(5) நெய்வேலியில் இரண்டாவது சுரங்க வெட்டை உடனே துவங்கக்கோரியும் (6) குமரிமாவட்ட முந்திரித் தொழிற்சாலை தொழிலாளர்களுக்கு நிரந்தரமான வேலை வாய்ப்புக்கிடைக்க முந்திரிக் கொட்டையை ஒதுக்கிக் கொடுக்கும்படி மத்திய அரசைக்கோரியும்;

(7) மத்திய மாநில அரசு ஊழியர்களின் போராட்டங்களை அரசியல் சட்டப்பிரிவு, பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் அடக்குவதையும் பழிவாங்குவதையும் கண்டிப்பதோடு, மூன்றுவது சம்பளக் கமிஷன் சிபாரிசுகளை உடனடியாக வெளியிடுமாறு மத்தியஅரசைக் கோரியும்

(8)தேசிய மயமாக்கப்படும் தனியார் துறை மோட்டார் தொழிலாளர்களின் வேலைக்குப் பாதுகாப்புத் தரும்படி மாநில அரசைக்கோரியும்.

(9)உறுதியுடன்போராடிய சிமெண்ட் தொழிலாளர்கள், கோவை மாவட்ட விவசாயத் தொழிலாளர்களை வாழ்த்தியும்

(10) பள்ளிப்பாளையத்தில் நடந்தது போன்று தொழிற் சங்க போராட்டங்களில் ஈடுபட்டதற்காக மாநிலம் முழுவதும் தொழிலாளர்கள் மீது தொடுக்கப்பட்டுள்ள பல வழக்குகளை வாபஸ் பெறுமாறு மாநில அரசை வற்புறுத்தியும் மற்றும் பல தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன.

(நமது தொழிற் சங்க நிருபர்)




## வ. உ. சி. விழாவும் அமைச்சர்கள் தட்டிக் கழிப்பும்

ஐயா,

வ. உ. சி. நூற்றாண்டு விழாவையொட்டி தூத்துக்குடியில் செப். 5ம்தேதி சிலை திறப்பு விழாவும், தபால்தலை வெளியீட்டு விழாவும் நடைபெற்றன.

அதே தினத்தில் வ. உ. சிதம்பரனார் பிறந்த ஊரான ஓட்டப்பிடாரத்தில் சிலைத் திறப்பு விழாவுக்கும் ரூ. 15 ஆயிரம் செலவில் கட்டப்பட்டிருக்கும் பிரயாணிகள் விடுதி திறப்பு விழாவுக்கும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

ஓட்டப்பிடாரத்தில் நடைபெறும் இவ் விழாக்களில் முதலமைச்சர் கருணாநிதியும் மற்ற தலைவர்களும் கலந்துகொள்ளுவர் என்று பத்திரிகைகளிலும் செய்தி வெளியாகியிருந்தது.

நெல்லை மாவட்ட கலெக்டரே ஏற்பாடு செய்திருந்த இவ் விழாக்கள் நடைபெறாமல் நின்றதற்குக் காரணம் என்ன?

அமைச்சர்களுக்கு வசதியில்லை என்பதற்காக செப். 5ம் தேதியன்று (வ. உ. சி. பிறந்த நாளன்று) அவருடைய பிறந்த ஊரில் சிலைத் திறப்பு விழா நடைபெற முடியவில்லை. அதுமட்டுமல்ல அதற்குப்பின்இத்தனை நாட்கள் ஆகியும் சிலைத் திறப்பு விழாவுக்கும், பிரயாணிகள் விடுதி திறப்பு விழாவுக்கும் இன்னும் தேதி நிர்ணயிக்கப்படவில்லை.

பஞ்சாயத்து யூனியன்கள் நன்கொடை மூலம் ரூ. 15 ஆயிரம் செலவில் கட்டப்பட்ட பிரயாணிகள் விடுதிகள் கட்டிடமும்பயன்படுத்தப்படாமல் கிடக்கிறது.

ஒரு முறை தள்ளி வைக்கப்பட்ட விழாக்களுக்கு மறு தேதி நிர்ணயிப்பதற்கு தாமதம் ஆவதேன்?

இங்ஙனம்
எஸ். சண்முகம்
ஓட்டப்பிடாரம்.

# நாட்டைவிட்டு வெளியேறுவோருக்கு நிபந்தனை

## சோவியத்அரசின் நடவடிக்கை

வெளி நாடுகளுக்குச் சென்று, அங்கு நிரந்தரமாகக் குடிபுக விரும்பும் சோவியத் பிரஜைகள், தாங்கள் உயர்கல்வி பெறுவதற்காக அரசு செலவழித்த தொகையை, அரசுக்குத் தந்துவிட்டே செல்லவேண்டும் என்றதொரு சட்டத்தை சோவியத் யூனியன் பிறப்பித்துள்ளது.

தற்போதுள்ள சோவியத் சட்டத்தின்படி, கல்வி பெறுவதற்கு முன்னரோ பின்னரோ சோவியத் அரசு இளைஞர்களின்மீது எவ்வித கோரிக்கைகளையும் நிபந்தனைகளையும் விதிப்பதில்லை; புதிய சட்டப்படி, அரசுச் செலவில் உயர் கல்வி பெற்று அதன் பின்னர் நாட்டைவிட்டு வெளியேற விரும்பும் மிகச் சிறுபான்மையினர் மீது நிபந்தனை விதிக்கப்படுகிறது. இச்சட்டம், மிகப் பெருவாரியான சோவியத் பிரஜைகளின் எண்ணத்தையே பிரதிபலிப்பதாகும். இச்சட்டத்தின் இறுதியான சாராம்சம், கல்வியைப் பெற்றுக் கொள்பவர்கள், தங்கள் மக்களுக்கு உயர்ந்த பட்ச நன்மைகளைத் தேடித் தர வேண்டும் என்பதே.

### ஒப்புமை கிடையாது

இந்த விஷயத்தில் மேலைய நாடுகளுக்கும், சோவியத் யூனியனுக்கும் எவ்வித ஒப்புவமையும் கிடையாது. மேலைய நாடுகளில் உயர் கல்வி முறை, வர்த்தக ரீதியாக அமைக்கப்பட்டது; அது சோவியத் நாட்டில் நிலவும் முறையினின்று முற்றிலும் வேறுபட்டது. சோவியத் நாட்டில் பொது நிதியிலிருந்து இலவசக் கல்வியை அனைவரும் பெறுகின்றனர்.

மேலைய நாடுகளிலோ கல்விக்காகும் செலவை, வருங்காலவிஞ்ஞானியும், அவரது குடும்பமுமே ஏற்கவேண்டியுள்ளது. முதலாளித்துவ உலகில் நிலவும் சட்டம் இளைஞர்களிடம் கூறுவதென்ன? "உனக்கு உயர் கல்வியோ விசேஷக் கல்வியோ தேவையெனில் அதற்காகும் செலவையும், அல்லது பெரும் பகுதியையேனும் முதலில் செலுத்தி விடு; அல்லது இப்பொழுது உன்னிடம் பணமில்லையெனினும், பிற்காலத்தில் அதைத் தருவதற்கு உத்தரவாதம் கொடு.

### பணமிருந்தால் பெறுவாய்

அதாவது, ஆரம்பத்திலிருந்தே ஒரு இளைஞனை "பணமிருந்தால் நீ பெறுவாய்; இல்லையெனில் அப்பால் நகர்ந்து செல்",என்ற "சுதந்திர"ச் சந்தையின் தாரக மந்திரம் எதிர்நோக்குகிறது.

உதாரணமாக, ஸ்வீடன் நாட்டில் மாணவர்களுக்கு அரசு நிதியுதவி அளிக்கிறது. மாணவர் ஒருவருக்கு ஆண்டொன்றிற்கு 10,000 குரோனர்வரை அரசு அளிக்கிறது. கல்விக் காலத்தில் மாணவர் பெற்ற தொகையை, அந்த மாணவர் கடனைக் கருதி, அதை மீண்டும் அரசுக்குச்செலுத்தியாக வேண்டும்.

அமெரிக்காவில், பாங்குகள்மாணவர்களுக்குநீண்ட காலத் தவணைகளில் கடன் கொடுக்கின்றது. அங்கு கல்லூரிப் படிப்பிற்கு ஒரு மாணவருக்கு ஆகும் செலவு 25 ஆயிரம் டாலர்கள் ஆகும். இதையும் அந்த மாணவர், தனது பிற்காலத்தில் திருப்பிச் செலுத்தியாக வேண்டும்.

(4-ம் பக்கம் பார்க்க)

# 1936-லிருந்து–72 வரை 9 மடங்கு உயர்வு

விலைவாசி உயர்வை 1936-ஆம் ஆண்டிலிருந்தே கணக்கிடும புள்ளி விபரங்களை "லா ஜர்னலஸ்" ஏடு தொடர்ந்து வெளியிட்டு வந்துள்ளது.

1936ஆம் ஆண்டை துவக்கமாக கொண்ட புள்ளி விபரங்கள் இவை. 1936-ல 100 என்று கணக்கில் கொண்டு தயாரிக்கப்பட்டது.

இரண்டாம் உலக யுத்தத்திற்கு முன்பு இருந்த மொத்த விலைவாசி நிலையை ஆரம்பமாகக் கொண்டு கோவை நகரத்திற்கு இந்த விபரம் தயாரிக்கப்படுகிறது.

விலைவாசிபுள்ளி

| ஆண்டு | ஜனவரியில் | ஜூனில் |
|---|---|---|
| 1970 | 780 | 791 |
| 1971 | 857 | 872 |
| 1972 | 938 | 933 |

1970 ஜனவரிக்கும் 1972 ஜனவரிக்கும் இடையில் உயர்வு 158 புள்ளி. அதே போல 70ஜூனுக்கும் 72ஜூனுக்கும் இடையில் உயர்வு 142. இரண்டாவது உலகயுத்தம் ஆரம்பமாவதற்கு முன் 1936லிருந்து தொடர்ந்து வெளி வரும் விபரம் இது.

ஆனால் இந்த விபரத்தை மத்திய அரசாங்கம் வெளியிடுவதில்லை. 1936ஐ ஆதாரமாகக் கொண்டால் அரசும், முதலாளிகளும தம் ஊழியர்களுக்குப் புரியும் அநீதி அம்பலமாகிவிடுமல்லவா?

1936-ல் கொடுத்தது போல் 9 மடங்கு சம்பளமும், பஞ்சப்படியும் கொடுத்தால்தான் விலைவாசி உயர்வுக்குத் தக்க உண்மையான நஷ்ட ஈடு வழங்கப்படுவதாகக் கருதப்படும்.

# தேர்தல்வாக்குறுதிகள் நிறைவேறிவிட்டதாம்!

## பிரதமர் இந்திரா பசப்பல்

பாட்ளு, செப். 20— விலைவாசி உயர்வுநம் நாட்டில் மட்டும் ஏற்படவில்லை என்றும் உலகம் முழுவதும் விலைகள் உயர்ந்துகொண்டுதான் இருக்கின்றன என்றும் பிரதம மந்திரி இந்திரா காந்தி இங்கு இன்று பத்திரிகையாளர்கள் கூட்டத்தில் பேசுகையில் கூறினர். (சோஷலிஸ்ட் நாடுகளில் விலைகள் உயராமலும் குறைந்து கொண்டும் இருப்பதைப் பற்றி அவர் குறிப்பிடவில்லை)

இப்போது இந்தியாவில் விலைகள் உயர்ந்திருப்பதற்குக் காரணம் அண்மையில் பாகிஸ்தானுடன் யுத்தம் ஏற்பட்டதினுலும் பல மாநிலங்களில் வறட்சி எற்பட்டதினுலும் தான் என்று பிரதமர் இந்திரா கூறினர்.

தேர்தல் காலத்தில் உங்கள் கட்சி கொடுத்த வாக்குறுதிகள் நிறைவேறிவிட்டனவா என்று ஒரு நிருபர் கேட்டார்.

இந்தக் கேள்வி பிரதம மந்திரியின் ஆத்திரத்தைக் கிளறிவிட்டது.

எந்த வாக்குறுதியை நிறைவேற்றவில்லை என்று கூறுமாறு அந்த நிருபரைப் பார்த்து பிரதம மந்திரி கேள்விகேட்டார்.

பிளவுபடாத காங்கிரசிலிருந்த சிண்டிகேட் ஆட்கள் அனைவரும் இப்போது புதிய காங்கிரசில் சேர்ந்துவிட்டனர் என்று கூறப்படுவதை தான் ஒப்புக்கொள்ள முடியாது என்றும் பிரதம மந்திரி கூறினர்.

# கொள்ளையடிக்கும் முதலாளித்துவ திமிங்கிலங்களுக்கு சுப்பிரமணியம் வக்காலத்து

**புதுடில்லி, செப். 20 -**

**தொழில்களை நாட்டுடைமையாக்கும்கொள்கையால் முதலீடு செய்வதில் நிச்சயமற்றதன்மை ஏற்பட்டிருக்கிறது எனவே உற்பத்தியைப் பெருக்கும் விதத்தில் அரசின் கொள்கை விரைவில் வெளியிடப்படும் என்ற கருத்தை மத்திய தொழில் வளர்ச்சி அமைச்சர் திரு. சி. சுப்பிரமணியம் இங்கு இன்று வெளியிட்டார்.**

**இந்தியாவில் தொழிலாளர்கள் உற்பத்தித் திறன் பெருகவில்லை என்று தொனிக்கும் கருத்தையும் அவர் வெளியிட்டார்.**

இங்கு நடைபெற்ற மாநில தொழில் அமைச்சர்கள் மாநாட்டில் திரு. சுப்பிரமணியம் பேசினர். அம்போது அவர் குறிப்பிட்டதாவது:—

சமீபத்தில் இந்தியஇரும்பு உருக்குகம்பெனி (இஸ்கோ) கல்கரி சுரங்கங்கள், தாமிர கார்ப்பரேஷன் ஆகியவற்றைஅரசு மேற்கொண்டதை யடுத்து முதலீட்டுத்துறையில் சுணக்கம் ஏற்பட்டுள்ளது. புதிதாக முதலீடுசெய்வதில் நிச்சயமற்ற தன்மையும் தயக்கமும்ஏற்பட்டுள்ளநிலைமையில் அவற்றை போக்க வேண்டிய அவசியமேற்பட்டுள்ளது.

பின் தங்கிய பகுதி அபிவிருத்தி, பெரிய மற்றும் அன்னிய மெஜாரிட்டி பங்குகள் உள்ள கம்பெனிகள் அன்னிய ஒத்துழைப்பு முதலீடுகள் சம்பந்தமான அரசின் அணுகுமுறை தெளிவுபடுத்தப்படும்.

அரசுத் துறை, கூட்டுத் துறை பெரிய தொழில் நிறுவனங்கள் அந்நியக்கம்பெனிகளின் பங்கு, அந்நிய முதலீடு ஒத்துழைப்பு ஆகியவை மேலும்தொழில் அபிவிருத்தியை விரைவுபடுத்தும் முறையிலும் உற்பத்தியை அதிகரிக்கும் முறையிலும் தெளிவாக விளக்கும் முறையில் புதிய கொள்கைத் தீர்மானம இருக்கும்,

### உற்பத்தித்திறன் பெருகவில்லையாம்

தொழில் உறவு சம்பந்தமாக அரசு விரைவில் தெளிவான கொள்கையை உருவாக்கும்என்றும் திரு சுப்பிரமணியம் கூறினர்.

தொழிலாளர் நலம் சம்பந்தமாக இந்தியாவின் நடவடிக்கைகள் உலகிலேயே மிகவும் முற்போக்கானவை என்றும்அவர் கூறிக்கொண்டார். என்ருலும் உற்பத்தித் திறன் பெருக அது உதவியதாக யாரும் கூறமுடியாது என்றும் அவர் கூறினர்.

## உண்ணுவிரதம்

சேலம், செப். 20— இன்று 19—9—72 காலை 9 மணிக்கு சங்ககிரி சிமெண்ட் ஆலையில் வேலை நீக்கம் செய்யப்பட்ட 24 தொழிலாளர்களுக்கு மீண்டும் வேலை கொடுக்க வற்புறுத்தும் பொருட்டு சேலம் முனிசிபல் லேபர் யூனியன் சார்பில் தலைவர் மெப்பராயன் உறுப்பினர் பெரியண்ணன் ஆகியோர் 48 மணிநேர உண்ணுவிரதத்தை சேலம் கலெக்டர் ஆபீஸ் முன் துவங்கினர்.

பெண் குருவி : இந்த மாதிரி என்னை இங்கே காக்க வெச்சிட்டு நீ எங்கெல்லாமோ ஊரெல்லாம் சுத்திரியே?

ஆண் குருவி : கோவுச்சுககாதே,கண்ணு!எனக்கு இப்பவெல்லாம்ரொம் ரொம்ப வேலை.

பெ: அப்படி என்னவாம பெரிய வேலை?

ஆ: நம்ப அமைச்சர் இருக்காரே! அவரோட திட்டு வந்தேன்.

பெ: எந்த அமைச்சர்?

ஆ: மாதவன்.

பெ: எந்த ஊருக்குப்போயி அரசாங்கப்பணத்தைக் கரைச்சீங்க?

ஆ: ரொம்ப தூரமில்லேடி கிட்டத்தான்! டெல்லிக்கு. அங்கே ஒரு முக்கியமான கூட்டம அதிலே பேசிருைபாரு நம்ம மாதவன். ...... அசந்தே போயிட்டாங்க எல்லாரும்.

பெ: அப்படி என்னவாம்?

ஆ: பெரிய முதலாளிங்க இருக்காங்க இல்லெ?

பெ: இருக்காங்க, டாட்டா, பிர்லா, சிங்கானியா, மபத்லால்... இவங்களைத்தானே சொல்றே?

ஆ: ஆமாம் ஆமாம்.

பெ: மூணே வருஷத்திலே தங்களோட லாபத்தை ரூ. 2000 கோடி அளவுகது உயர்த்திக் கிட்ட திமிங்கிலங்க இல்ல

ஆ: ஆமாம்! ஆமாம் அவுங்களேதான்.

தொழில்னு சொன்னு இவங்களுக்குத்தான் எல்லாந் தெரியும். இவங்களைத்தான் நம்பணும். இவங்களுக்குத்தான் எல்லா லைசென்சுகளும் குடுக்கணும். தேசிய மயமாக்கி, முட்டாள்தனம் எதுவும் செய்திடக் கூடாதுண்ணு நம்ம அமைச்சர் போட்டாரே ஒரு போடு......

பெ: அதுக்கப்புறம் என்ன நடந்தது?

ஆ: அதை ஏன் கேக்குறே 75 பெரும் பெரும் இம்பாலாக் காருங்க ஒரே சரமாரியா வந்து மந்திரி தங்கி இருந்த இடத்துக்கே வந்திருச்சு. பெரிய விருந்து அடேயப்பா!....விருந்து சாப்பாடுண்ணு..... சொல்லிக்க முடியாது!

பெ: அடச்சே...! சுமமா கிட...! மானவெக்கமில்லாமெ பீத்திக்காதே!

ரூ. 5 கோடிக்கு மேலே உள்ள தனியார் மூலதனத்தை எல்லாம நாட்டுடைமையாக்குக என மத்திய ஆட்சியை வலியுறுத்தி மதுரை மாநாட்டிலே தீட்டிய தீர்மானம் என்ன ஆச்சு?

ஆ: ஆ! அதுவா! ஏட்டிலே எழுதியதெல்லாம் நாட்டிலே நடக்குமா!

—பொன்னவன்

# அகில இந்திய மட்டத்தில் எதிர்க்கும் லீகுடன் கேரளத்தில் மட்டும் கூட்டு ஏன்?

## இந்திரா காந்தியின் நடைமுறை ஏற்பாட்டின் பொருள் என்ன?

காங்கிரஸுக்கும் முஸ்லீம் லீகுக்கும்இப்பொழுதுஉறவு எப்படி இருக்கிறது என்று பிரதமர் இந்திராகாந்தியிடம் பத்திரிகை நிருபர்கள் சில வாரங்களுக்கு முன்னல் திருவனந்தபுரத்தில் கேள்வி கேட்டார்கள். இதிலே எவ்வளவோ விஷயங்கள் இருக்கிறது.

அகில இந்திய மட்டத்திலே - அலிகார் முஸ்லீம் பல்கலைக்கழக மசோதாவை அகில இந்திய முஸ்லீம்லீக் எதிர்க்கிறது. இந்த மசோதாவை லீக் எதிர்க்கும் காரணம் என்ன?

இந்த மசோதாவிலே ஜனநாயகத்தை மறுக்கிறர்கள் என்ற காரணத்திஞல், இதை லீக் எதிர்க்கிறதா? கிடையாது. அதற்குமாருக, சிறுபான்மையோரின் உரிமைகளைப் பறிக்கிருர்கள் என்று குற்றம் சாட்டி எதிர்க்கிறது. அதாவது கேரளத்தில் தனியார் கல்லூரி நிர்வாகங்களின் கொள்ளையில் அரசு தலையிட்டபோது, எப்படி மைனரிட்டி உரிமை பறிபோகிறது என்று கத்திஞர்களோ அதே கூச்சலைத்தான் அலிகார் பல்கலைக்கழகமசோதா விஷயத்திலும் எழுப்புகிருர்கள்.

### விலைக்கட்டுப்பாடு பிரச்னையில் எப்படி?

விலைவாசிகளைக் கட்டுப்படுத்தும் பிரச்னையிலும் முஸ்லீம் லீக் எப்படி நடந்து கொள்ளுகிறது. இப்பிரச்னையில் அநேக பெரும் வியாபாரிகளையே முஸ்லீம் லீக் பிரதிநிதித்துவப்படுத்துகிறது.

இன்னும் சொல்லப்போனுல், முஸ்லீம் லீக் பெருந்தலைவர்களிலேயே பலர் மொத்த வியாபாரிகளாக இருக்கிருர்கள். அதனுல்தான் அவர்கள் கட்டுப்பாடுகள் அனைத்தையும் எதிர்க்கிருர்கள். அதனுல்தான் இன்றுள்ள உணவு மண்டலங்களையும் கூட எடுத்துவிட வேண்டுமென்று கூறுகிருர்கள்.

### மிரட்டல் யுத்தம்

கேரளத்தில் முஸ்லீம் லீக் தலைவர்கள், இந்திரா காங்கிரஸை மிரட்டி மீன்பிடிக்கப்பார்க்கிருர்கள். முஸ்லிம் லீகின் ஆதரவு இருந்தால் தான் காங்கிரஸ் மந்திரி சபை நீடிக்கும். ஆதரிக்க மறுத்துவிட்டால் காங்கிரஸ் கட்சி எங்கோ ஒரு மூலையிலேபோய் சாய்ந்துகிடக்க வேண்டியதுதான்''—என்று பயமுறுத்தல்களும் சவால்களும் விடுகிருர்கள்.

### கூட்டு அல்லவாம் நடைமுறை ஏற்பாடாம்

இப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில்தான் இந்திரா காந்தியிடம், ''முஸ்லீம் லீகுடன் காங்கிரஸ் கட்சியின் உறவு முறை எப்படி இருக்கிறது?''—என்று பத்திரிகை நிருபர்கள் கேட்டார்கள்.

அதற்கு இந்திரா காந்தி என்ன பதில் சொன்னர்?

''முஸ்லீம் லீகுடன் நாங்கள் கூட்டுறவு கொள்ளவில்லை. வெறும் நடைமுறை ஏற்பாடுதான்—ஓர்க்கிங் அரேஞ்ஜ்மெண்ட்தான் செய்துகொண்டிருக்கிரேம்''— என்று கூறினர்.

### இக்கட்டான நிலை

அகில இந்திய மட்டத்தில் முஸ்லீம் லீக் தன்னை எதிர்க்கும்போது... அலிகார் முஸ்லீம் பல்கலைக்கழக மசோதா பிரச்னையில் இந்திரா அரசுக்கு எதிராக வகுப்புவாத அடிப்படையில் பெரும் கிளர்ச்சி நடத்தப்போவதாக முஸ்லீம் லீக் மிரட்டும்போது ..உறவுமுறை பற்றிப் பேச இந்திரா காந்திக்கு இக்கட்டான நிலைதான் ஏற்பட்டிருக்கிறது. ''முஸ்லீம் லீகுடன் நாங்கள்நேசஉறவு கொண்டுதான் இருக்கிரேம்'',என்று ஒப்புக்கொள்ள இந்திரா காந்தியால் முடியவில்லை.

அதே சமயத்தில் இந்திரா காந்திக்கும் தெரியும். அதாவது, கேரளத்தில் லீகின் ஆதரவு இருந்தால்தான் காங்கிரஸ் கட்சி, ஆட்சிபீடத்தில் இருக்க முடியும் என்று லீக் தலைவர்கள் சொல்லி வருவதிலும் உண்மை இருக்கத்தான் செய்கிறது என்பதை இந்திராகாந்தி அறிந்தே இருக்கிருர்.

### கொள்கையாம் கோட்பாடாம்

இந்த லட்சணத்தில் இந்திராகாந்தி சொல்லுகிருர், நேச உறவு இல்லையாம், நடைமுறை ஏற்பாடு தானும்! இந்த நடைமுறை ஏற்பாடு என்ருல் என்னவாம்? வகுப்புவாத அடிப்படையில் வெறி பிடித்து கிளர்ச்சியில் ஈடுபடப்போவதாக மிரட்டும் முஸ்லீம் லீக் போன்றதொரு கட்சியுடனுங்கூட.கேவலம்.பதவியில் ஒட்டிக் கொண்டிருக்க வேண்டும் என்ற ஒரே காரணத்துக்காக மட்டுமே காங்கிரஸ்கட்சி கைகோர்த்துக் கொண்டிருப்பதைப் பற்றி என்ன சொல்லுவது?

இந்த அவகேட்டின் மத்தியிலுங்கூட, காங்கிரஸ் தலைவர்கள் கொள்கைகளைப் பற்றியும் கோட்பாடுகளின் புனிததன்மைகளைப் பற்றியும் வாய் கிழிய பேசுகிருர்களே, அவர்களுக்கு இப்படியெல்லாம் பேச அச்சம் கூச்சம் ஒன்றுமே இருக்காதா?

—பீப்பில்ஸ் டெமாகிரசி

# அரசு மட்டத்தில் இந்திய - சோவியத் கூட்டுக் கமிஷன்

மாஸ்கோ, செப். 21— இந்தியா - சோவியத்யூனியன் ஆகிய இரு நாடுகளுக்கிடையே ஒரு கூட்டுக் கமிஷன் நிறுவும் உடன்பாட்டில்கையெழுத்தானது. இந்திய - சோவியத் நட்புறவு ஒப்பந்தப்படி இந்த நடவடிக்கை மேற்கொள்ளப்படுகிறது.

இந்த உடன்பாட்டில் இந்தியா சார்பில், மந்திய திட்டஅமைச்சர் டி. பி. தார் கையெழுத்திட்டார்.

பொருளாதார உதவி, ஆயுதஉதவி, வர்த்தகஉறவு மற்றும் கலாச்சாரம் போன்ற பல்வேறு ஷரத்துக்களைக் கொண்ட இந்திய— சோவியத் நட்புறவு ஒப்பந்தத்தை அமுலாக்கவே இந்தக் கூட்டுக் கமிஷன் நிறுவப்படுகிறது.

இதன்படி, இவ்விரு நாடுகளது அரசாங்கப் பிரதிநிதிகள் அடங்கிய குழுக்கள் இவ்விரு நாடுகளிலும் இருக்கும்.

இக்கூட்டுக்கமிசன் நிறுவ ஏற்பட்டுள்ள இந்த உடன்பாடானது வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சியாகும் என்று சோவியத் வெளிநாட்டு பொருளாதார தொடர்பு குழுத் தலைவர் சைமன் காலீச்சோவ் கூறினர்.

# தோல் ஷாப் முதலாளிகளின் சண்டித்தனம்

திண்டுக்கல் செப் 21— திண்டுக்கல் தோல் பதனிடும் தொழிலாளர்களின் தொடர்ந்த போராட்டத்தின் காரணமாக கடந்த 9-9-72ல் மதுரை லேபர் ஆபீஸர்முன் தோல் பதனிடும் தொழிலாளர் சங்கத்திற்கும், தோல் வர்த்தகர் சங்கத்திற்கும் இடையில் ஒரு பஞ்சப்படி ஒப்பந்தம் ஏற்பட்டது.

ஒப்பந்தப்படி 1969 செப்டம்பர் முதல் 178 வாழ்க்கைப் புள்ளிக்கு மேல் உயரும் 5 புள்ளிக்கு நாளொன்றுக்கு 5 பைசா வீதம் கணக்கிட்டுத் தருவது என்று முதலாளிகள் ஒப்புக்கொண்டனர். மெரும்பாலான தோல்ஷாப்புகளில் ஒப்பந்தப்படி தந்துவிட்டார்கள். ஆனுல் சில குறிப்பிட்ட பெரிய முதலாளிகள் மட்டும் பஞ்சப்படி தராமல், ஒப்பந்தத்துக்கு புது வியாக்கியானம் செய்கிருர்கள். லீவு நாட்களுக்கு பஞ்சப்படி தர முடியாது என்று அடம் பிடிக்கிருர்கள்.

இது சம்பந்தமாக மதுரை லேபர் ஆபீசரும் விளக்கம் அளித்து அதன் பின்பும் முதலாளிகள் தரவில்லை. இவ்வாறு ஒப்புக்கொண்டபடி பஞ்சப்படி தராததைக் கண்டித்தும், பெரும்பான்மையான தோல் ஷாப்புகளில் கொடுத்த பின்பும் சில ஷாப்புகளில் மட்டும் தராததை எதிர்த்தும் பஞ்சப்படி தராத தோல் ஷாப்புகளில் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்து வருகின்றனர்.

### கருங்காலித்தனம்

பஞ்சப்படி தராத தோல் ஷாப்புகளில் ஒரு சில தொழிலாளிகள் தி, மு. க. பேரவையில் சேர்ந்தவர்கள் உள்ளனர். இவர்கள் கருங்காலி வேலை செய்யத் தயாராக இருப்பதால், அவ்வாறு செய்தும் வருவதால், முதலாளிகள் பணிய மறுக்கின்றனர். திமுக சங்கத்தின் கருங்காலித் தனத்திஞல் அதிலிருந்த ஒரு சிலரும் வெறுப்புற்று விலகி நிற்கின்றனர்.

செப். 19ல் ஒரு மாபெரும் ஊர்வலம் நடந்தது. அதன் பின் நடந்த பொதுக்கூட்டத்தில் தோழர்கள் ஏ.முனுசாமி, வி. எஸ். எம். மரைக்காயர், எஸ். ஏ. தங்கராஜன் ஆகியோர் பேசும் போது பஞ்சப்படி கிடைக்கும்வரை ஸ்ட்ரைக் நீடிக்கும் என முதலாளிகளை எச்சரித்தனர்.

# தோல்பதனிடும் தொழிலாளர் பொதுவேலைநிறுத்தம் ஒத்திவைப்பு

## எஸ். ஏ. தங்கராஜன் அறிவிப்பு

மதுரை.செப்.20— மாநில ரீதியில் செப். 20ந் தேதி முதல் நடக்கவிருந்த தோல் பதனிடும் தொழிலாளர்களது பொது வேலை நிறுத்தம் ஒத்திவைக்கப்படுவதாக போராட்டக் குழு செயலாளர் தோழர் எஸ். ஏ. தங்கராஜன் அறிவித்துள்ளார்.

கோவை. மதுரை,சேலம், திருச்சி, சென்னை, செங்கற்பட்டு மாவட்டங்களில் உள்ள தோல் பதனிடும் தொழிலாளர்கள்-தங்களின் சம்பள உயர்வு, வேலை அளவு நிர்ணயம் கோரி வேலைநிறுத்த நோட்டீஸ் கொடுத்து இருந்தனர். இந்த வேலை நிறுத்தத்தில் மாநிலம் முழுவதும் 25,000 தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்ய இருந்தனர்.

### லேபர் கமிஷனர் வேண்டுகோள்

இதனிடையில் லேபர்கமிஷனர் கடிதம் மூலம், 25—9——72-ல் தம் முன் சந்தித்துப் பேச்சு வார்த்தை நடக்க இருப்பதால் வேலை நிறுத்தத்தை ஒத்திவைக்கும்படி கேட்டுக் கொண்டுள்ளார். அதன் படி 25-ந் தேதிவரை பொது வேலைநிறுத்தம் ஒத்திவைக்கப்பட்டுள்ளது. பேச்சு வார்த்தை வெற்றி பெருவிட்டால் 25ந் தேதிக்குப் பிறகு வேலைநிறுத்தத்தைத் தொடர்ந்து நடத்துவது என்று தொழிலாளர்கள் உறுதியாக இருக்கின்றனர்.

### போராட்டக் குழு கூட்டம்

சென்னை லேபர் கமிஷனருடன் 25-ந் தேதி நடக்கும் பேச்சு வார்த்தைக்குப் பின் போராட்டக் குழு சென்னையில் கூடி அடுத்த நடவடிக்கை பற்றி முடிவெடுக்கும் என்று போராட்டக்குழு செயலாளர் தோழர் எஸ். ஏ. தங்கராஜன் அறிவித்துள்ளார்.

# சிறுமுகையில் சிம்சன் தொழிலாளர் ஆதரவு உண்ணுவிரதம்

சிறுமுகை, செப். 18— கோவை மாவட்டம், சிறுமுகையில் உள்ள சௌத் இந்தியா விஸ்கோஸ் கம்பெனித் தொழிற்சங்கத்தின் சார்பில், 4-9-72அன்று சிறுமுகை தபால் நிலையம் முன்பு, சங்க உபதலைவர் தோழர் எஸ். எம். லட்சுமணன் தலைமையில் முன்னணி ஊழியர்கள் உண்ணுவிரதம் இருந்தனர்.

# மறைந்த எம். கே. மீரானுக்கு அஞ்சலி

உத்தமபாளையம், செப். 12—

தமிழ் நாட்டில் விவசாயிகள் இயக்கத்தை கட்டிய் தலைவர்களில் ஒருவரும் 1946, 47, 48 ஆண்டுகளில் உத்தம பாளையத்தில் நில வெளியேற்றத்தை எதிர்த்து நடைபெற்ற போராட்டத்திற்கு தலைமை தாங்கிய வருமான தோழர் எம். கே. எம். மீரான் அவர்கள் 14-9-72தேதிமாலை இயற்கை எய்திய செய்தி ஏற்கனவே பிரசுரிக்கப்பட்டுள்ளது. செப். 15 தேதி அவர் உடல் அடக்கம் செய்யப்பட்டது.

தோழர் மீரான் ஆரம்பத்தில் போலீஸ் சப் - இன்ஸ்பெக்டராகப் பணிபுரிந்து அந்த வேலையை ராஜிஞமா செய்துவிட்டு விவசாயிகள் இயக்க வேலையில் ஈடுபட்டார்.

தமிழ்நாடு விவசாயிகள் சங்கத்தலைவராகவும் அகில இந்திய விசாயிகள் சங்க நிர்வாகக்குழு உறுப்பினராகவும் பல ஆண்டுகள்செயலாற்றியுள்ளார்.விவசாயிகள் இயக்கம் கடுமையான அடக்குமுறைக்கு உள்ளான 46, 48 ஆண்டுகளில் பாதுகாப்புக் கைதியாக வேலூர் சிறையில் வைக்கப்பட்டு கொடுமைகளுக்கு ஆளாக்கப்பட்டபோதிலும் உறுதியாக விவசாயிகள் பக்கம் நின்ருர்.

அன்னுர்மறைவைக்கேள்வியுற்ற மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் க்ட்சி தலைவர்கள் ஏ.ஏ. வஹாப் பி.உசேன்மீர் கே. ராஜப்பன் எஸ். கே. சுப்ரமணியம், ஏ. லாசர் ஆகியோர் சென்று அவரது குடும்பத்தாருக்கு அனுதாபம் கூறினர்கள்.

# உகண்டாவுக்கு தான்சானியா எச்சரிக்கை

தார்-எஸ்-சலாப், செப். 20— தான்சானியாவின் ஜனதிபதி ஜூலியஸ் நயரேரே தன்னாட்டின் மீது இருமுறை குண்டுவீசித் தாக்கி பல மக்களைக்கொன்றுள்ள உகண்டாவின் ராணுவ சர்வாதிகார ஆட்சிக்குக் கடுமையான எச்சரிக்கை விடுத்துள்ளார்.

தொடர்ந்து உகண்டா அத்துமீறி இத்தாக்குதல்களை நடத்துமானுல். அதை சகித்துக் கொண்டு நாங்கள் கைகட்டி நிற்கப்போவதில்லை என்ருர்.

# திண்டுக்கல்லில் ஜனநாயக மாதர் சங்கம் அமைப்பு

திண்டுக்கல், செப். 20— திண்டுக்கல் தெற்குரத வீதி திரு. சுந்தரம்கல்யாண மஹாலில் செப். 17-ந் தேதி மாலையில் ஜனநாயக மாதர் சங்கத்துவக்க விழா திருமதி லெக்ஷ்மி அம்மாள் தலைமையில் நடைபெற்றது. இந்த ஜனநாயக மாதர் சங்கத் துவக்க விழாவுக்கு தமிழ்நாடு மாதர் சங்க அமைப்பாளர் தோழர் பாப்பா உமாநாத் வந்து கலந்துகொண்டார். உழைப்பாளர் வர்க்கத்தின் பெண்கள் 200 க்கு மேற்பட்டவர்கள் திரளாக பங்குகொண்டார்கள்.

தோழர் பாப்பா உமாநாத் கடந்த கால சமுதாய வரலாறு பற்றியும். சொத்து உடைமை ஆண்களுக்கு மாறிய நிலைமை பற்றியும். பெண்கள் அடிமை குறித்தும், சோஷலிச நாடுகளில் ஏற்பட்ட சமத்துவம் குறித்தும். பெண் விடுதலை குறித்து, மார்க்ஸும் மகாகவி பாரதியாரும் கூறியதுபற்றியுபி, விலைவாசிகள் உயர்ந்துள்ளது பற்றியும் பேசினர். பெண்கள் கரகோஷமிட்டு கேட்டார்கள்.

ஜனநாயக மாதர் சங்க அமைப்புக் குழுவின் நிர்வாகஸ்தர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

வெக்ஷ்மியம்மாள் தலைவராகவும், எஸ். லீலா செயலாளராகவும், ஆர். முருக வள்ளி பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

நிர்வாகக் கமிட்டி உறுப்பினர்களாக பி. பெத்தி, கே. மாரியம்மாள். அருள் மேரி, முனியம்மாள், உமாதேவி, தனம், சலேத் மேரி, அம்மாபிள்ளை ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்டனர். பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

### மாதர்கள் ஊர்வலம்

தோழர் லெக்ஷ்மியம்மாள் தோழர் பாப்பா உமாநாத் ஆகியோர்தலைமையிலமாலையில் மாதர்கள் ஊர்வலம் நடைபெற்றது.

பின்னர் பாரதி திடலில் நடந்த பொதுக்கூட்டத்தில் ஜனநாயக மாதர் சங்கச் செயலாளர் தோழர் எஸ். லீலா தலைமை வகித்தார். தோழர் பாப்பா உமாநாத் பேசினர்.

# நெய்வேலி மருந்துவ ஊழியர் சங்க புதிய நிர்வாகிகள் ஏகமனதான தேர்வு

நெய்வேலி, செப்.17— நெய்வேலி நிறுவனத்தில் மருத்துவ ஊழியர் சுமார் 400 பேர்கள் உள்ளனர். அவர்களுக்கென இயங்கும் மருத்து ஊழியர் சங்கம் எந்தக் கட்சிக் கட்டுப் பாட்டிலும் இல்லாத சங்கமாகும். இதில் தொடர்ந்து முக்கிய பதவிகளில் இருப்பவர்கள் மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட்களே. ஆயினும் தொழிற்சங்கத்தில் அரசியல் தலையீடு என்று புகார் கூறவியலாத அளவுக்கு சகல கட்சியினர் மதிப்பையும் பெற்று செயலாற்றுகின்றனர். அதனுல் இந்த ஆண்டு அலுவல் பொறுப்பு நிர்வாகிகள் போட்டியின்றி ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

### புதிய நிர்வாகிகள்

17-9-72 ஞாயிறன்று காலை சங்கத்தின் பேரவையில் கீழ்க்கண்டோர் ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்கட்டனர்:-

தலைவராக டி. சந்தியாகு, பொதுச் செயலாளராக வி. ஏ. ராமநாதன். செயலாளராக ஈ. எஸ். ரவீந்திரன், துணைச் செயலாளராக எம். வெங்கடேசன், உப தலைவராக குருசாமி, பொருளாளராக சி. முத்துசாமி மற்றும் 13 நிர்வாகக் குழு உறுப்பினரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

# கண்ணோட்டம்

## யுத்தமா? கொள்ளைக்கும்பலா? எதனால் விலைவாசி ஏறிற்று?

மூன்று வருடங்களுக்கு முன்னே......ஒரு நடுத்தர வர்க்க குடும்பமானது......70 அல்லது 80 ரூபாய்க்கு சாமான்களை வாங்கி வாழ்க்கை நடத்தியது என்ருல்...... அந்த அளவு சாமான்களை வாங்கி இன்று வாழ்க்கை நடத்த வேண்டுமானுல்......ரூ. 150 முதல் ரூ. 180 வரை செலவழிக்க வேண்டியிருக்கிறது.

அந்த அளவுக்கு விலைவாசி இரு மடங்கு அதிகரித்து விட்டது, மூன்றே வருடத்தில்!

இந்தக் கணக்கை யார் சொன்னது தெரியுமா? ஐக்கிய நாடுகள் சபையின் தகவல் பீரோ நடத்திய ஒரு சர்வேயிலிருந்து தெரியவந்துள்ளதாக புதுடில்லிச்செய்தியொன்று கூறுகிறது.

ஐக்கிய நாடு நிபுணர்கள் கணக்கு இது. இன்னும் உள்ளே புகுந்து கடை கடையாய் விசாரித்தால்...... இன்னும் அதிகமாக விலைவாசி ஏறியிருப்பது தெரிய வரும்...கடைகளுக்குப் போய் நாம் விசாரித்தாலும் சரியான விபரம் தெரியாது.

நாலும் மூணும் வாங்கி ஆக்கிப் போட்டு, கொண்ட கணவனையும் குழந்தை குட்டிகளையும் பராமரிக்கிற தாய்மார்களைக் கேட்டால்... அவர்கள் சொல்லுவார்கள்... அரிசி விலையா அநியாயம் அநியாயம்!... பருப்பு விலையா அக்ரமம்!... கறி மீனு கருவாடு விலையைச் சொல்லவே வேண்டாம்...காய்கறி உருளைக் கிழங்கு கோஸு...அந்த வயிற்றெரிச்சலை ஏன் கேட்கிறீங்க......

இப்படி விலைவாசிகள் உயர்ந்து போனதைப் பற்றி கொதிப்பும் கொந்தளிப்புமாகப் பேசுவார்கள். ஆம்! அவர்களிடம் அவர்களது ஆத்திரத்தைத்தான் கேட்க முடியுமே தவிர...புள்ளி விபரங்களைக் கேட்க முடியாது. அந்த அளவுக்கு நெருப்பு மாதிரி விலைவாசி ஏறிப்போய் விட்டது.

ஆத்திரப்படுவோர் எப்பொழுதுமே ஆத்திரப்பட்டுக் கொண்டிருக்க முடியுமா? வாய்விட்டு அழுது புலம்பவும் செய்கிருர்கள். அவர்களது ஒப்பாரிப் பாட்டு இன்றைய விலைவாசி ஏற்றத்தின் கொடுமையையும் வறுமையின் கோரத்தையும் படம் பிடித்துக் காட்டுகிறது.

உங்களுடைய பேச்சை நிறுத்தி, அந்தத்தாய்...... குடும்பத்தின் தலைவி......வைக்கும் ஒப்பாரியைக் காது கொடுத்துக் கேளுங்கள்.

கெடச்சதொரு சில்லரையை
கடைத் தெருக்குக் கொண்டு போனு
அங்காடிச் சாமான்கள் வெங்காயம் தக்காளி
காய்கறி வாங்கிடவே காணுது கைக்காசு
பச்சமிளகா வாங்க பத்தாது கைக்காசு
தேங்கா வெல கேட்டா திணறியே போகுதம்மா
மாங்கா வெல கேட்டா மனசொடிஞ்சு போகுதம்மா
கத்தரிக்கா வெலெ கேட்டா பத்திக்குது
வயிறுஎல்லாம்
அகவெல ஏறுதம்மோ ஆனவெல குதிரைவெல
பக்கா தலைதட்டி படியரிசி மூணுரூபா
எக்காலம் கண்டதில்லே எண்ணெய் பருப்புவெல
விலைவாசி அத்தனையும் விஷம்போலே ஏறினதால்
தலையிலே தேங்கா எண்ணெய்
சரிவரக் கண்டதில்லே
வாரத்தில் பலநாளு வயிருர உண்டதில்லே
நான் பருப்புக் கொழம்புவச்சு பலநாளும் ஆயிருச்சு
இறைச்சிக் கொழம்பு வச்சு எத்தனையோ நாளாச்சு
முட்டைக் கொழம்பு வச்சு எட்டு மாதம் ஆயிருச்சு
மீனு கொழம்பு வச்சு மூணு மாதம் ஆயிருச்சு
இந்தக் கருவாட்டுக் கழுதையை
— நான் கண்ணுலேயும் பாக்கலையே
ஆவியைப் பறிப்பதற்கே அகவெலயை ஏற்றிவிட்ட
பாவிபறப்பான்கள் படக்குணு போகாரோ?
பட்டினியை ஏவிவிட்டு பரதவிக்க விட்டவங்க
சட்டுணுதான் ஒழியாரோ—சாமிகண்ணு திறவாரோ?

இப்படியாக ஒவ்வொரு வீட்டிலும் ஒப்பாரியும் ஓலமுமாக இருக்கிறது. இந்தப்பரிதாபத்தைப் பற்றியெல்லாம் வறுமையை ஓட்டுவதாக வாய்ச்சவடால் அடித்த இந்திராகாந்தியிடம் எடுத்துச்சொன்னுல் அந்த அம்மையார் என்ன சொல்லுகிருர் தெரியுமா?

பாகிஸ்தான் யுத்தம், சீனு யுத்தம், பங்களாதேஷ் யுத்தம் என்று3 மூன்று யுத்தம் வந்ததால்தான் விலைவாசி ஏறிவிட்டது என்று பதில் சொல்லுகிருர்.

இதற்குதான் நமது தலைவர் பி. ராமமூர்த்தி ஒரு தடவை சரியான பதிலடி கொடுத்தார். எப்படிக்கொடுத்தார் தெரியுமா?

"சண்டை போட்டோம், சண்டை போட்டோம் என்கிருயே! நீ மட்டுமா சண்டை போடடாய்?

சீனுக்காரன் சண்டை போடலையா? வடகொரியாக்காரன் சண்டை போடலையா? வட வியட்னுமிலே சண்டை நடக்கலையா?

அந்த நாடுகளிலெல்லாம் லேசான சண்டையா நடந்தது? ஒரு மாசம் ரெண்டு மாசத்துக்குள் முடிந்த சண்டையா? அல்லது 2 வருஷம் 3 வருஷத்தில் முடிகிற சண்டையா? பல வருடங்களாக சண்டைகள் நடந்தும்... நாடு நகரமெல்லாம் குண்டு வீச்சுகளால் நாசமாகியும் கூட... அந்தநாடுகளிலே யுத்தத்தின் காரணமாக விலைவாசிகள் ஏதாவது ஏறிப்போச்சா? கிடையாதே. அதற்குமாருக. முன்னைவிட விலைவாசிகள் இறங்கிக் கொண்டு அல்லவா இருக்கின்றன!"... என்று சக்கைப் போடு போட்டார்.

இதற்கு இந்திரா என்ன பதில் சொல்லப் போகிருர்? அது சர்வாதிகார நாடு, அதனுல் முடியும்... நம்ம நாடு அப்படி அல்ல. ஜனநாயக நாடு... இங்கேயெல்லாம் படிப்படியாகத்தான் அடியெடுத்து வைக்க முடியும் என்று ஏதாவது கதை அடிப்பார்!

கொள்ளை லாப கள்ள மார்க்கெட் கூட்டத்தின் தொந்தி தொப்பைகளுக்கு முட்டுக்கொடுக்கும் முட்டு தாங்கித் தொழிலை விசுவாசமாகச் செய்கிறவர்கள் வேறு என்னதான் சொல்ல முடியும்?

—அ. மா. ரா.

சோதனைச் சாவடியா? வேதனைக் கூடமா?

# கேரள எல்லையில் வசிக்கும் மக்களை பட்டினிபோடும்கொடுமை

## உத்தமபாளையத்தில் ஆர்ப்பாட்டம்

உத்தமபாளையம், செப். 22—

**மதுரை மாவட்டம் உத்தமபாளையம் தாலுகாவின் கேரள எல்லையை ஒட்டியுள்ள கிராமங்களைச் சேர்ந்த 8000 பொதுமக்கள் கையெழுத்திட்ட மகஜர் ஒன்று, கடந்தவாரம் உத்தமபாளையம் தாசில்தாரிடம் கொடுக்கப்பட்டது. இப்பகுதி மக்கள், அரசாங்க அதிகாரிகளின் நடவடிக்கைகளின் காரணமாக, அரிசி விலையேற்றத்தால் பெரிதும் பாதிக்கப்பட்டு, கொந்தளிப்பாக இருக்கிருர்கள்.**

உத்தமபாளையம் தாலுகாவிலுள்ள லோயர் கேம்ப், கூடலூர், கம்பம், உத்தமபாளையம், கோம்பை, தேவாரம் போன்ற ஊர்கள், கேரள எல்லையை அடுத்துள்ள பகுதியாகும்.

இங்கிருந்து கேரளத்துக்கு அரிசி கடத்திச் சென்றுவிடாதபடி தடுக்க, சோதனைச் சாவடிகளை (செக் போஸ்டுகளை) வைத்திருக்கிருர்கள். செக் போஸ்டுகள் இல்லாத போது இங்கெல்லாம் ஒரு பட்டணம் படி அரிசி ரூ. 1—75-க்கும் குறைவாக விற்றது. செக் போஸ்டுகள் வந்தபிறகு படியரிசி ரூ. 2—25, ரூ. 2—50-க்கு விற்கப்படுகிறது.

### தடுத்தலால் வினை

இதற்குக் காரணம் என்ன? எல்லைப் பகுதியாக இருப்பதினுலே, இங்கிருந்து கேரளத்துக்கு அரிசி கடத்தல் நடக்க ஏதுவாகுமென்று கருதி இப்பகுதிக்கே வெளியிடங்களிலிருந்து அரிசி வராமல் அதிகாரிகள் தடுத்துவிட்டார்கள். வெளியிடங்களிலிருந்து அரிசி வராததால்—பற்ருக்குறை ஏற்படுமென்பதைப் புரிந்து கொண்ட நிலப் பிரபுக்களும் பெரும் வியாபாரிகளும், நெல் மூட்டைகளைப் பதுக்கிவிடுகிருர்கள். பதுக்கி, கள்ளச் சந்தையில் விற்று கொள்ளை லாபம் அடிக்கிருர்கள்.

### பெர்மிட் கடத்தல்

மேலும், ஜனங்களுக்கு நிர்ணய விலையில் அரிசி வினியோகம் செய்வதற்கென்று, தாசில்தாரிடம் பெர்மிட் வாங்கிய பெரும் வியாபாரிகள் அரிசியை ஜனங்களுக்கு விற்காமல்—கடத்தலைத் தடுக்கக் கூடிய அதிகாரிகளுக்கே லஞ்சம் கொடுத்து, அவர்களைக் குள் போட்டுக் கொண்டு அரிசியைக் கடத்தி வருகிருர்கள். இதனுல் அரிசிப் பற்ருக்குறை ஏற்பட்டு, அரிசி விலை கிராக்கியாகி வருகிறது.

### தடுத்தல் புலிகள்

இதனுல் பல்லாயிரக் கணக்கான ஏழை மக்கள் கஷ்டப்படுகிருர்கள். இந்த நிலையில்தேனி,சின்னமனூர் போன்ற ஊர்களிலிருந்து சாப்பாட்டிற்கென்று 3 படி, 4 படி என்று வாங்கி வந்தால் அதை கடத்தல் தடுப்புப்புலிகள் பிடுங்கிப் பங்கு போட்டுக்கொள்ளுகிருர்கள்.

மேலும், ஒரு சில வியாபாரிகள், கண் துடைப்புக்காக என்றைக்காவது ஒரு நாள் அரிசி விற்ருல், படியரிசி ரூ. 2—10க்கு விற்கிருர்கள். மதுரை மாவட்டத்திலேயே நெல் விளைச்சல்அதிகமாகஉள்ளது உத்தமபாளையம் தாலுகாதான். ஆனுல் இங்குதான்படியரிசி ரூ. 2—50.

இதற்குக் காரணம், அதிகாரிகளின்சுயநலமும், கண்மூடித்தனமும்தான். கடத்தலைத் தடுக்கிற வேலையைச் செய்யாமல்— கடத்துகிறவர்களுக்கு உடந்தையாக இருக்கிருர்கள்.

### பொங்கிஎழுந்தனர்

துன்பம் பொறுக்க முடியாத பொதுமக்கள் பொங்கி எழுந்தார்கள்.

நியாய விலைக் கடைகள் திற!... செக் போஸ்டுகளை கேரள எல்லைக்கு மாற்று! லஞ்சம் வாங்கிக் கொண்டு கடத்தலுக்கு உடந்தையாக உள்ள அதிகாரிகள் மீது நடவடிக்கை எடு! — என்ற கோரிக்கை முழக்குடன் லோயர் கேம்ப், கூடலூர், காமயக் கவுண்டன்பட்டி, கம்பம், புதுப்பட்டி, உத்தமபாளையம், கோம்பை, பண்ணைப்புரம்,தேவாரம்,சிந்தலைபட்டி, சங்கராபுரம், லட்சுமிநாயக்கன்பட்டி ஆகிய கிராமங்களைச் சேர்ந்த பொது மக்கள் உத்தமபாளையம் தாசில்தார்ஆபீஸ் முன்னுல் ஆர்ப்பாட்டம் செய்தார்கள்.

8000 பேர் கையெழுத்திட்ட மகஜரை முதலமைச்சருக்கு அனுப்பும்படி, தோழர்கள் பி. உசேன்மீர், கே. ராஜப்பன், வி. சொக்கலிங்கம், எம். எம். அனிபா, எஸ். கே. சுப்ரமணியம் ஆகிய தோழர்கள் தாசில்தாரிடம் கொடுத்தனர்.

### போராட முன் வருக பழனிச்சாமி அறைகூவல்

ஆர்ப்பாட்டம் செய்த மக்கள் மத்தியில், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மதுரை — முகவை மாவட்டச் செயலாளர் தோழர் ஏ. பி. பழனிச்சாமி பேசினுர்.

விலைவாசி உயர்வுக்கு மத்திய அரசுதான் பொறுப்பு என்றும் - அதைத் தடுக்க மத்திய,மாநில அரசுகள் நடவடிக்கை எடுக்கவில்லையென்றும் — மத்திய மாநில அரசுகளை எதிர்த்து தொடர்ச்சியாகப் போராடினுல்தான் கோரிக்கைகளைப் பெற முடியுமென்றும் — அதற்கு அனைத்து மக்களும் ஒன்று சேர வேண்டுமென்றும் அறைகூவி அழைத்தார்

# விலைவாசிஉயர்வு,வேலையில்லா...

(1-ம்பக்கத் தொடர்ச்சி)

கும் லஞ்ச ஊழலுக்கும் ஊற்ருக உள்ள ஏகபோக முதலாளிகளின் தொழில் உடைமைகள் பறிக்கப்பட்டு அரசால் நடத்தப்படவேண்டும்.

(ஈ) ரூபாய் 10-ம் அதற்கு மேலும் உள்ள கரன்சி நோட்டுகள் முழுவதையும் வாபஸ் பெற்று, புது நோட்டுகள் வெளியிட வேண்டும்.

(உ) வேலை யில்லாதோருக்கு வேலை கொடுக்க வேண்டும்; அல்லது சோறு போட வேண்டும். ஒவ்வொரு இந்திய குடிமகனுக்கும் வேலை செய்யும் உரிமையை ஜீவாதார உரிமையாக ஏற்றுக் கொள்ளும் வகையில் அரசியல் சட்டம் திருத்தப்பட வேண்டும்.

(2)

### அரசுக்கும் மக்களுக்கும் எச்சரிக்கை

மாநில அரசு, சில பிரதேசங்களை வறட்சிப் பிரதேசமாக அறிவித்து வரி வசூலும், கடன் வசூலும் ஒத்திப் போடப்படுவதாக அறிவித்துள்ளது. ஆனுல் அப்பிரதேசங்களில் வாழும் மக்கள் வாழ்வதற்கு எந்த வகையான நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்படவில்லை.

அரிசி இதர தானியங்கள் ஆகியவற்றின் கொள்முதல் என்பதை அரசு அறவே நிறுத்தி விட்டது. நெல் விளைச்சல் அதிகமாக உள்ள தஞ்சை மாவட்டத்தில் நிலச்சுவான்தார்களின் கோரிக்கைகளை அரசு ஏற்றுக்கொண்டு, லெவியைக் கைவிட்டுவிட்டது. இதனுல் அறுவடை நடந்துகொண்டிருக்கும்போதே குறுவை நெல் தஞ்சை மாவட்டத்தில் மூடைக்கு (45 படி) 41 ரூபாயாக ஏறிவிட்டது.

எதிர்காலத்தில் பயங்கரமாக விலை ஏறப்போகிறது என்றும் அதைச் சமாளிக்க மாநில அரசிடம் ஸ்டாக் இல்லாத நிலையும் ஏற்படப் போகிறது என்றும் தமிழக அரசையும், மக்களையும் மாநிலக் குழுஎச்சரிக்கிறது.

### விசைத்தறி டிராக்டர் புகுத்தலை நிறுத்துக

விசைத்தறிகளைப புகுத்துவதன் மூலம் மாநில அரசு ஏராளமான கைநெசவுத் தொழிலாளர்களை வேலையற்றவர்களாக ஆக்கி வருகிறது.

அதே போன்று விவசாயத்தில் பெருநிலச்சுவான் தார்களுக்கு அனுசரனையாக டிராக்டர்களை புகுத்துவதின் மூலம், கிராமப்புறங்களில் வேலையின்மையைஅரசு வளர்க்கிறது. இந்நிலைமையிலாவது மாநில அரசு கீழ்க்கண்ட நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டுமென்று மாநிலக் குழு கோருகிறது.

### நமது கோரிக்கைகள்

அ) வறட்சிப் பிரதேசங்களில் நிவாரண வேலையை பெரிய அளவில் துவக்கி, மலிவு தானியக்கடைகளைத் திறக்கவேண்டும். அவசியமான இடங்களில் கஞ்சித் தொட்டிகளைத் திறக்க வேண்டும்.

ஆ) 3 ஏக்கர் நஞ்சைக்கு மேலுள்ள நிலச்சுவான்தார்களிடமுள்ள உணவு தானியங்களை, அவர்களது தேவை போக மீதியைக் கட்டாயக் கொள்முதல் செய்து நியாய விலைக்கு விநியோகம் செய்ய ஏற்பாடு செய்ய வேண்டும்.

இ) விசைத்தறி புகுத்துவதை நிறுத்த வேண்டும்.

ஈ) டிராக்டர்களைப் புகுத்துவதை நிறுத்த வேண்டும்.

உ) விலைவாசி ஏற்றத்திற்கு பிரதான காரணமாகயுள்ள மத்திய சர்க்காரின் கொள்கைகளைக் கைவிடுமாறு மத்திய சர்க்காரை வற்புறுத்த வேண்டும்.

3) விலையேற்றத்தைத் தடுத்து நிறுத்தவும், வேலையில்லாத் திண்டாட்டத்திற்கு நிவாரணம் பெறவும், மத்திய— மாநில அரசுகள் மீது பொதுமக்களின் நிர்பந்தத்தை வளர்க்க கிளர்ச்சியும் போராட்டமும் அவசர அவசியமாகிவிட்டது.

ஆகவே, இக்கோரிக்கைகளுக்காக தமிழக மக்களைத் திரட்டி போராடுவது என்று மாநிலக்குழு முடிவு செய்கிறது.

அதன் முதல் கட்டமாக தமிழகமெங்கும் பிரச்சாரம் நடத்தி, அக்டோபர் மாதம் 1 முதல் 8 வரையில் விரிந்த அளவில் உண்ணுவிரதங்களை நடத்துதல்.

அடுத்து அக்டோபர் 9, 10 தேதிகளில் மாவட்டத் தலைநகர்கள் மற்றும முக்கிய நகரங்களில் மத்திய, மாநில அரசு அலுவலகங்களுக்கு முன் வெகுஜன ஆர்ப்பாட்டங்களை நடத்துதல்.

பின்னர் அக்டோபர் 18, 19, 20 தேதிகளில் மத்திய, மாநில அலுவலகங்களின் முன் மறியல் நடத்துவது என்று மாநிலக்குழு முடிவு செய்கிறது.

இப்போராட்டத்தில் பொதுமக்களை பெரிய அளவில் திரட்டுவதற்கு கட்சியின் அமைப்புகள் பூராவும் முழுமூச்சுடன் செயலாற்ற வேண்டும் என்று பணிக்கிறது.

### கூட்டு நடவடிக்கைக்கு வேண்டுகோள்

இந்த பயங்கர வேதனையிலிருந்து மக்களைப் பாதுகாப்பதற்கான இப்போராட்டத்தில் எல்லா இடதுசாரி, ஜனநாயகக் கட்சிகளும், வெகுஜன ஸ்தாபனங்களும் கூட்டாக நடவடிக்கை மேற்கொள்ள வேண்டியது அவசியம் என மாநிலக்குழு கருதுகிறது

தொடர்ந்து போராட்டத்தை நடத்துவதற்காக, இதர இடதுசாரி, ஜனநாயக் கட்சிகளையும், வெகுஜன ஸ்தாபனங்களையும் அணுகிக் கூட்டு நடவடிக்கைகளைப் பற்றி விவாதிக்க மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தயாராகஇருக்கிறது. இக்கட்சிகளின், ஸ்தாபனங்களின்ஒத்துழைப்பை உளப்பூர்வமாக மாநிலக்குழு நாடுகிறது.

## நாட்டை விட்டு ..

2-ம் பக்கம் தொடர்ச்சி

பிரான்சு நாட்டிலுள்ள சட்டப்படி, தேசிய முக்கியத்துவம் வாய்ந்த உயர் கல்விக்கூடங்களில் பயின்று தேறியவர்கள், 10 ஆண்டு காலத்திற்கு அரசு நியமிக்கும் பணியைச் செய்தாக வேண்டும்; அவ்வாறில்லையெனில், அவர்களது கல்விக்காகச் செலவிடப்பட்ட தொகையனைத்தையும் அவர்கள் அரசுக்குத் திருப்பித்தர வேண்டும்.

### திரித்துக் கூறல்

இஸ்ரேலுக்குக் குடியேற விரும்பும் சோவியத் யூதர்களுக்கு எதிரானதொரு நடவடிக்கையே புதிய சட்டம் என்றும், அது மனித உரிமைகளை மீறுகிறது என்றும் சில மேலைப் பத்திரிகைகள் திரித்துக் கூறுகின்றன. அது அப்பட்டமான பொய்யே. பொதுப் பணத்தை விரயமாகாமல் தடுப்பதற்காகவும், சோவியத் நாட்டிலேயே கல்வி பெற்று அந்த நாட்டிலேயே பணிபுரிய விரும்புபவர்களின் நலன்களைக் காப்பதற்காகவுமே நிறைவேற்றப் பட்டதுதான் இந்தப் புதிய சட்டம். எந்த இனத்தைச் சேர்ந்தவராக ஒருவர் இருந்தபோதும், அரசாங்கச் செலவில் கல்வி பெற்று வெளி நாட்டில் சென்று குடியேற விரும்பும் அனைவருக்கும் இச்சட்டம் பொதுவானதாகும்.

### யுனெஸ்கோ பரிந்துரைக்கு முரணற்றது

1972 ஏப்ரல் 17-ந் தேதி பாரிசில் நடைபெற்ற யுனெஸ்கோ நிர்வாகக் கவுன்சில் கூட்டம், "சிறந்த பயிற்சிபெற்ற விஞ்ஞானிகள் நாட்டைவிட்டுச் செல்ல நேர்ந்தால், அந்த நஷ்டத்திற்கு அவர்கள் ஈடு செய்வதற்கான, நடவடிக்கையை" மேற்கொள்ளுமாறு நாடுகளைக் கேட்டுக் கொண்டுள்ளது.

ஆக, தற்போது சுப்ரீம் சோவியத் இயற்றியுள்ள சட்டம், 'யுனெஸ்கோ'வின் எந்தப் பரிந்துரைக்கும், மனித உரிமைகள் சட்டத்திற்கும் முரணுனதல்ல என்பது தெளிவு.

## கரட்டூரில் படிப்பகம்.

சேலம், செப். 19— கரட்டூரில் பி. ராமமூர்த்தி படிப்பகத் துவக்க விழாப் பொதுக் கூட்டம் 17-9-72ல் கரட்டூர் கட்சி கிளை அலுவலக முன் தோழர் பி. குப்புசாமி தலைமையில் நடைபெற்றது.

தோழர் கே. எஸ். அர்த்தனுரி (மாவட்ட கட்சி செயலாளர்) படிப்பகத்தை துவக்கிவைத்து படிப்பகத்தின் நோக்கம் பற்றியும் விலைவாசிஉயர்வும், வறட்சியால் மக்கள்படும் நிலைமைகள் குறித்தும் பேசினுர்.

தோழர்கள் எஸ். கணபதி, கே. ரங்கண்ணன், பி. கிருஷ்ணன், பி. பழனி, பி. முருகேசன் மற்றும் பலர் பேசினுர்கள்.

தோழர் சிதம்பர பாரதி குழுவினரின் கலாநிகழ்ச்சி நடைபெற்றது.

சேலம் சிதம்பரபாரதியின் கலைக்குழுவினர் புதிய மெட்டுகளில் மிக நல்ல முறையில் மிக இனிமையாகப் பாடினர். பெருந்திரளாக மக்கள் வந்திருந்து ஆரவாரங்களுடன் ஆதரவளித்தனர்.

# உகண்டா சர்வாதிகாரிக்கு உதவி தடுக்கப்பட்டது

அம்பாலா, செப். 21— உகண்டாவின் தலைநகரான கம்பாலா நகரத்தின் மத்திய பாகத்தில் துப்பாக்கி குண்டும் வெடியோசை பல இடங்களில் கேட்டது. உள்நாட்டுக் கலகம் எல்லையோரத்தில் மட்டுமல்ல. கம்பாலா நகருக்கும் பரவியிருக்கிறது,

இந்த வெடியோசைக்குப் பிறகு. உகண்டா அரசு நகரத்தின் மத்திய பாகத்திலுள்ள மக்களை அங்கிருந்து வெளியேறிப் போகும்படி உத்தரவிடடுள்ளது.

### பிரதம நீதிபதி கைது

உகண்டா உயர்நீதி மன்றத்தின் பிரதம நீதிபதி திரு. கிவானுக்கா நேற்று இங்கு கைது செய்யப்பட்டார். சர்வாதிகாரி அமீனின் ஆட்கள் நீதிமன்றத்திற்குள்ளே நுழைந்து பிரதம நீதிபதி அணிந்திருந்த மேல் அங்கியையும் கழுத்து காலரையும் பிடுங்கினர்கள். அதன்பின் அவருக்கு கைவிலங்கிட்டு அழைத்துச் சென்றனர்.

### லிபியா முயற்சிக்கு சூடானின் தடை

உகண்டா சர்வாதிகாரியின் அராஜகச் செயல்களுக்கு ஆதரவளிக்க லிபியாவின் ராணுவ சர்வாதிகாரி கடாபி நான்கு லிபிய விமானங்களில் துருப்புக்களையும் ராணுவ தளவாடங்களையும் அனுப்பினர். அந்த விமானங்கள் இடையே உள்ள சூடானைக் கடந்து செல்ல முயன்றபோது சூடானின் அரசு இவைகளை தடுத்துநிறுத்தி லிபியாவிற்கே திரும்பி அனுப்பியது.

# கல்கத்தாவில் டாக்சி டிரைவர்கள் வேலைநிறுத்தம்

கல்கத்தா, செப்.19— கல்கத்தாவில் கடந்த செவ்வாயன்று டாக்சிகள் ஓடவில்லை. சில குண்டர்கள் டாக்சி டிரைவர்களைத் தாக்கியதையடுத்து டாக்சி டிரைவர்கள் வேலை நிறுத்தம் செய்தனர். அந்தப் புகாரை அடுத்து 11 பேர் கைது செய்யப்பட்டிருப்பதாக போலீஸ் அறிவித்தது.

கடந்த திங்களன்று நாராயணசந்திர மிஸ்ரா என்ற டிரைவரும் படுகொலை செய்யப்பட்டார்.

# பொகாரோ உருக்காலை சோவியத் உதவி

புதுடெல்லி. செப். 21— பொகாரோ உருக்காலைக்கு எட்டரைக்கோடி ரூபிள் கடன் வழங்க சோவியத் அரசு சம்மதித்துள்ளது.

இந்த உக்ருகாலையில் உற்பத்தி சக்தி ஆண்டுக்கு 40 லட்சம் டன்னுக உயரும் இரண்டாவது கட்டத்துக்கு இந்த உதவி கிடைக்கும்.

17 லட்சம் டன் உத்பத்தி செய்யும் முதல்கட்டத்துக்கு 20 கோடி ரூபிள் கடனை சோவியத் அரசு வழங்கியுள்ளது.

# மத்திய அரசு காரியதரிசிகள் நியமனத்தில் சங்கடம்

புதுடெல்லி, செப். 19— அடுத்த ஆண்டு மார்ச் 31-ந் தேதி வாக்கில் இந்திய அரசாங்கத்தில் பணிபுரியும் 30 ஐ. சி. எஸ். அதிகாரிகள் ஓய்வு பெறுகின்றனர். ஒரு ஐ. சி. எஸ். அதிகாரி இடத்துக்கு ஐ. சி. எஸ். அதிகாரிதான் நியமிக்கப்படவேண்டுமென்று விதி உள்ளது.

அடுத்த மார்ச் கடைசியில் 50 ஐ. சி. எஸ். அதிகாரிகளே எஞ்சி இருப்பர் என்று கருதப்படுகின்றது. இங்நிலையில் ஐ. ஏ. எஸ். அதிகாரிகள் நியமிக்கப்பட வேண்டியிருக்கும். இவர்களில் யாரைப் போட வேண்டும் என்பதில் சிக்கல் ஏற்படும் என்று கருதப்படுகிறது.

# உ.பி. வெள்ளத்தில் 17பேர் பலி

லக்னே. செப், 21— கடந்த சில தினங்களாக உ. பி.யில் பல பாகங்களில் அடித்த மழையிலும் வெள்ளத்திலும் 17 பேர் உயிரிழந்தனர். தெராய் பகுதியில் சாரதா ஆற்றில் பல பிணங்கள் மிதந்ததாக நேரில் கண்டவர்கள் கூறினர். பரேலியில் ஏராளமானகால் நடைகள் மாண்டதாக தகவல்கள் வந்துள்ளன. 904 கிராமங்கள் பாதிக்கப்பட்டதாக அதிகாரப் பூர்வமான அறிவிப்பு ஒன்று கூறுகிறது.

## நடக்க இருப்பவை

இந்திய கம்யூனிஸ்கட்சி (மார்க்சிஸ்ட்)

**பொதுக்கூட்டம்**

நாள்: 27-9-72 புதன் மாலை 7 மணி

இடம்: தர்மபுரி பழைய பஸ் நிலையம்

தலைமை: தோழர் கே. சி. கிருஷ்ணன்

பேசுபவர்;

**பி. ராமமூர்த்தி**

தேசிய பெரியம்மை ஒழிப்புத் திட்ட

**மாநில அம்மை குத்துவோர் சங்கம்**

மதுரை - முகவை கிளைகளின்

**சிறப்புக் கூட்டம்**

**24 9-72 அன்று**

**மதுரை திடீர் நகர்**

மின்தொழிலாளர் சங்க அலுவலகத்தில் நடைபெறும்.

**திருஜே.எஸ்.பரதன்**

(மாநில என். ஜி. ஓ. சங்க துணைத் தலைவர்)

**திரு. ப. குத்புதீன்**

(என். ஜி. ஓ. சங்க மாவட்ட செயலாளர்)

**ஜி.ஜே. பொன்னையா**

(அம்மை குத்துவோர் சங்க ஆலோசகர்)

மற்றும் பலர் பேசுவர்

இந்திய கம்யூனிஸ்ட்கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ்மாநிலக் குழு சார்பில், தீக்கதிர் அச்சகத்தில் (13- முதல் சந்து வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா.